# மணிவாசகர் நூலகம்

## பதின்மூன்றாண்டுப் பணி

## 21 - நூல்கள் வெளியீட்டு விழா

101 - அறிஞர்கள் வழங்கிய

ஆய்வுரை

அணிந்துரை

வாழ்த்துரை






241, லிங்கி செட்டி தெரு,
சென்னை - 1.

## வாழ்த்துப்பா

### நேரிசை வெண்பா

ஆயமணி வாசகர் அன்புநூ லாரகம்
நேயருடன் ஓங்கி நிதியோங்கித் — தூயபுகழ்
மெய்யப்பன் வாழியவே ஆறுமுகன் தண்ணருளால்
வையத்தில் வாழி மகிழ்ந்து

— கிருபானந்தவாரியார்

தில்லையான் தண்ணருளால் தென்மொழியில் நூல்பதிக்கும்
நல்லமணி வாசகர் நூலகம் — எல்லா
வளர்ச்சியும் பெற்று வளர்மதிபோல் வாழ்கென்று
உளம்நிறையச் சொல்வோம் உவந்து.

— புலவர் சோம. இளவரசு

அச்சிட்டோர் :
ஸ்ரீ விநாயகா, சிதம்பரம்.

# பாவேந்தர் பாரதிதாசனார்

## வாழ்த்துரை

அண்ணா மலைப்பல் கலைக்கழகப் பேராசான்
அண்ணா மலைஎன் அரியதமிழ் மாணவனின்
கண்ணான மாணவன்நான் என்று கழறித்தம்
கையெழுத் துப்படியைக் கண்ணுக் கெதிர்வைத்தே
அண்டியசீர்ப் பொள்ளாச்சிக் கல்லூரி ஆசான்நான்
அரிய நிலவுப்பூக் கவிதைநூல் நான்செய்தேன்
கண்செலுத்த வேண்டுமென்றார் ; மாட்டேனென்று
சொல்வேன் ?

கவிதை ஒவ்வொன்றும் அமிழ்தாக நான்கண்டேன்.

பாட்டுத் திறம்கண்டேன் பாலசுப் பிரமணியப்
பாவாணர் செய்தஅப் பச்சைத் தமிழ்நூலில் !
நாட்டுத் திறம்என்னே ! நாற்கவியும் முத்தமிழும்
நல்கும் பயன்என்னே ! நாவூறிப் போனேன்நான் ;
வீட்டிற் குறட்டைவிட்ட செந்தமிழர் கண்விழிக்க
வெற்றி இலக்கியத்தை அன்றளித்த பாரதிபோல்
பாட்டை திறக்கவந்த பாலசுப் பிரமணியப்
பைந்தமிழ்ப் பாவாணர் புகழ்பெற்று வாழியவே.

— ‘‘ நிலவுப் பூ ’’ நூல் முன்னுரையில் 1961.

## திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள்

வாழிமணி வாசகர் மாண்புமிகு நூலகம்
ஏழிசைசூழ் காழி இறையருளால் - ஊழிபல
மெய்யப்பன் வாழிமயில் மேலோன் திருவருளால்
வையமெலாம் ஏத்த மகிழ்ந்து

## கி. வா. ஜகந்நாதன், கலைமகள் ஆசிரியர், சென்னை.

அரியபல இலக்கியநூல் ஆர்வத்தைத் தூண்டுகின்ற
அருங்க தைகள்,
உரியமுறை யினில்மா ணுக்கர்கள் தேர்வில்வெற்றி
உறுதற் கேற்ற
தொருவழியைக் காட்டுகின்ற வெற்றிநூல் ஆதியன
உருவத் தோற்றம்
பொருளுயர்வு பெறப்பலர்க்கும் நூலகமொன் றுயர்தில்லைப்
பொலியு மாலோ

புகழும்மணி வாசகர்நூ லகமென்னும் பெயர்படைத்துப்
பொன்னே போலத்
திகழுமுயர் நூல்பலவும் பதினாறுண் டுகளாகச் செகத்தார்
மெச்சும்
வகையில்வெளி யிட்டின்று மலைபோல விளங்குவதை
மனங்கொண் டேன் ; இத்
தகையஉயர் நூலகம்மேன் மேலும் வளர்ந் தோங்கிநலம்
சார்ந்து வாழி

## கவியரசு கண்ணதாசன்

சிற்பியின் கவிதைகளில் குழைவையும் பாசத்தையும் நான் காண்கிறேன். தமிழகத்தின் மீதும் தமிழ்மொழியின் மீதும் அவர்கொண்ட பாசம் இந்தக் கவிதைத் தொகுப்பாக மலர்கிறது.

இலக்கணத்தைத் தன்னுள் அடக்கிக் கொண்ட சந்தப் பாடல்கள் நிறைந்து கிடக்கின்றன. பொருந்தா உவமைகளோ புரியாத சொற்சதுரங்கங்களோ இல்லை. எதிர்காலத்தில்தனித்து நிற்கும் தன்மை இவருக்கு உண்டு. உண்மைகளைத் தெளிவாகத் தரும் இந்தக் கவிதைக்கொத்து, படித்துப் படித்து மகிழத்தக்க தொன்றாகும். ஓசைகெடாத இனிய இந்தக் கவிதைகளைத் தமிழகம் வரவேற்கும் என்பதில் ஐயமில்லை. சிந்தனை வளமிக்க நூல்களை வெளியிடும் மணிவாசகர் நூலகத்தினை வாழ்த்துகின்றேன்.

— நிலவுப்பூ நூலில் கவியரசு கண்ணதாசன் வாழ்த்து

## பேராசிரியர் டாக்டர் வ. சுப. மாணிக்கம்

ஆய்வுநூல்களை முதலிட்டு வெளியிட அஞ்சும் நிலையங்கள் மலிந்துவரும் இத்தமிழகத்தில் சிறந்த மணிவாசகநூலக உறு துணையாளர் திரு மெய்யப்பன், தமிழ் நோக்குடைய அன்ப ராதலின் என் சிந்தனைக் களங்களை வழக்கம்போல் விரும்பி ஏற்று வெளியிடுகின்றார். இப்பதிப்பினால் மணிவாசகர் நூலகம் பன்மடங்கு நன்மதிப்புப் பெற்று வளர்க என்று தமிழருளை வேண்டுகிறேன். புது ஆராய்ச்சிகளையும் படைப்புகளையும் தமிழ்ப்பணியாக ஏற்றுப் பதிப்பித்து வரும் பண்புடைய சிதம்பரம் மணிவாசக நூலகத்தாருக்கு வாழ்த்துக்கள்.

## டாக்டர் மு. வரதராசனுர்

திருவாளர் ப. கோதண்டராமன் அவர்கள், வாழ்நாள் முழுவதும் இலக்கியத்தைப் பயின்று கலையின்பம் பெற்று வருபவர் ; இந்நூலில் பிரெஞ்சு, ஜெர்மன், ஆங்கில மொழி களின் இலக்கியங்களிலிருந்து இவர் காட்டிய மேற்கோள்கள் பல. இலக்கிய ஆராய்ச்சியாளர்க்கு இடையே நிலவும் பல திறக் கொள்கை வேறுபாடுகளும் (கலை கலைக்காகவே, கலை வாழ்க்கையின் பொருட்டே, யதார்த்த வாதம், ரொமாண்டிசம் எனப்படும் கற்பனைப் போக்கு, இயற்கை வாதம் முதலியன), இந்நூலாசிரியரால் ஆங்காங்கே சிறப்பாக ஆராயப்பட்டுள்ளன.

இத்தகைய நூல், தமிழ்மொழி வாயிலாக இலக்கியக்கலை பற்றி அறிய விரும்புவார்க்குப் பெரிதும் பயன்படும் என்பது என் கருத்து. அறிஞர் திரு ப. கோதண்டராமன் அவர்களின் இலக்கியத் தொண்டு இந்நூல் வாயிலாகச் சிறப்புறுகிறது. வெளியிடும் மணிவாசகர் நூலகத்தின் பணி பாராட்டத்தக்கது.

— '' இலக்கியமும் திறனய்வும் '' அணிந்துரை

## வித்துவான் க. வெள்ளைவாரணன்

நற்றமிழ் வழியே அறிவுநலம் பரப்பும் உயர்ந்த குறிக் கோளுடன் உழைத்து வரும் நூலகங்களுள் சிதம்பரம் மணிவாசகர் நூலகமும் ஒன்று. அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சித்துறைப் பேராசிரியராயிருந்த வித்துவான் கோ. சுப்பிரமணியப்பிள்ளை எம். ஏ., பி எல். எழுதிய கம்பர் விருந்து, மாணிக்க விருந்து முதலிய நூல்களும், பேராசிரியர் டாக்டர் வ. சுப. மாணிக்கம் எம். ஏ., பி. எச். டி. எழுதிய கம்பர், சிந்தனைக் களங்கள், இலக்கிய விளக்கம், ஒப்பியல் நூல் (இலக்கணம்) முதலிய நூல்களும், நண்பர் திரு. மார்க்க பந்து சர்மா, எம். ஏ. எழுதிய சிலப்பதிகார ரசனை, பேராசிரியர் டாக்டர் இரா. சாரங்கபாணி, எம். ஏ. பிஎச். டி. எழுதிய பரி பாடல், திரு. அரவிந்தன், எம். ஓ. எல். எழுதிய உரையாசிரி யர்கள் என்னும் நூல்களும் மணிவாசகர் நூலகம் வெளி யிட்டுள்ள சிறப்புடைய நூல்களிற் சில. இவற்றுள் பின்னர்க் குறித்த பரிபாடல், உரையாசிரியர்கள் என்பன தமிழக அரசின் பரிசு பெற்ற நூல்கள். இங்ஙனம் சிறந்த வகையில் உயர்ந்த நூல்களை வெளியிடும் புலமைப் பணியினை மேற்கொண்டுள்ள சிதம்பரம் மணிவாசகர் நூலகத்திற்குத் தமிழ் மக்களின் ஆதரவும் பாராட்டும் என்றும் உரியவாகும்.

## ஞா. தேவநேயன்,

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்ட இயக்ககம்,
சென்னை.

மணிவா சகர்நூ லகமன்றம் நீட
மணிவா சகநூல்கள் மன்னி — அணியோசைச்
சிற்றம் பலமுஞ் சிறந்தபே ரம்பலமும்
மற்றம் பலமாய் மலிந்து

திருக்குறளார் **வீ. முனிசாமி,** பி. ஏ., பி. எல்.,
குறள் வளர்ச்சிப் பணிமனை, விழுப்புரம்.

'வான்கலந்த மாணிக்கவாசக' என்று வடலூர் வள்ளலார் மனமுருகிப் பாடிய மாணிக்கவாசக சுவாமிகளின் நினைவில் இயங்கி வருகின்ற 'மணிவாசகர் நூலகம்' தமிழகத்தில் தலைசிறந்த நூல்களை வெளியிட்டுப் புகழேந்திய நிறுவனங் களில் ஒன்றாக அரும்பணியாற்றி வருகின்றது.

'இலங்குநூல்' என்று திருவள்ளுவர் குறிப்பிடுகின்ற இலக்கணத்திற்கேற்பச் சற்றேறக்குறைய எழுபத்தைந்து நூல்களை இவர்கள் வெளியிட்டுள்ளனர்

அடியேன் சில நூல்களைப் படிக்கும் பாக்கியம் பெற்றேன். 'தமிழும் தத்துவமும்' என்ற ஓர் அரிய நூலும் இவர்களது படைப்பேயாகும். 'ஒரு சோறு பதம்' எனக்கருதி இந் நூலினை நன்கு படித்தேன். பல நூல்களைக் கற்று அறிய வேண்டியவைகள் இந்த ஒரு நூலில் அடங்கிவிட்டன.

இவ்வாறே திருவள்ளுவப்பெருமான் குறிப்பிடுவது போன்று, 'உரைசான்ற நூல்' (நிரம்பிய நூல்) எனப் படுபவைகளை நன்கு அழகுற அச்சிட்டு வழங்கும் நண்பர் பேராசிரியர் திரு ச. மெய்யப்பன் அவர்களைப் பாராட்டுகிறேன்.

'நிற்க அதற்குத் தக' என்கிற மெய்யுரையினைச் சிரமேற் கொண்டு ஒழுகிவருகிறார். 'பண்பு பாராட்டும் உலகு' என்ற வள்ளுவர் வாக்கிற்கு இவர் மிகவும் பொருத்தமானவரே!

**தமிழ்வாணன்**, சென்னை.

மணிவாசகர் நூலகம், புத்தக வெளியீட்டுத் துறையில் 15 ஆண்டுகள் வெற்றி நடைபோட்டு, இப்போது 16-வது ஆண்டின் புகழ் ஏணியில் நிற்பதை அறிந்து பெரும் மகிழ்ச்சி அடைகிறேன். தங்கள் நூலகம், மாணவர்களுக்கும் தமிழ் மக்களுக்கும் நல்ல பல நூல்களைத் தந்து, வலிவும் பொலிவும் மிக்க நிறுவனமாகச் சிறந்து விளங்க வேண்டும் என்று வாழ்த்துகிறேன்.

**கம்பன் அடிப்பொடி**, காரைக்குடி.

மணிவாசகர் நூலகம் தமிழகத்திலுள்ள நல்ல நூற் பதிப்பகங்களுள் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். மணி மணியான நூல்களை வாசகர்கட்கு வழங்குவதில் முன்னிற்பது மணிவாசகர் நூலகம். சிறந்த நூல்களைத் தகுந்த ஆசிரியர்களைக் கொண்டு எழுதச் செய்து முறையாக வெளியிடும் அரிய பணியை மேற்கொண்டொழுகுவது மணிவாசகர் நூலகம். தொழிலாக மட்டுமின்றித் தொண்டாகவும் கொண்டு இயங்குவதால் மணி வாசகர் நூலகப் பதிப்புக்கள் எல்லாவற்றையும் அறிஞர்கள் விரும்பி வாங்குவதில் வியப்பேதுமில்லை. எது விலைபோகும் என்பதில் நாட்டம் கொள்ளாமல், எதை விலைபோகச் செய்ய வேண்டும் என்பதில் அக்கறை கொண்டு வெளியிடுவதில் ஆர்வம் காட்டும் மணிவாசகர் நூலகத்தை எத்துணைப் பாராட் டினும் தகும். பதினைந்து ஆண்டுகளைப் பயனுள்ள முறையில் தாண்டிப் பதினாறுவது ஆண்டில் அடி எடுத்துவைத்துள்ள மணிவாசகர் நூலகம் என்றும் பதினாறும் இளமையுடன் நின்று பணியாற்றி நிலவ, மன்றுள்ளாடும் மாதேவன் திருவருள் புரிக என நல்லன்பர் பலருடன் கூடி நாவினிக்க மனங்களிக்க வாழ்த்தி மகிழ்கிறேன்.

**அழ. வள்ளியப்பா,**
குழந்தை எழுத்தாளர், சென்னை.

தமிழகத்தின் தலைசிறந்த அறிஞர் பலரது அரிய படைப்புகளை வெளியிட்டுத் தமிழ் மொழிக்கும், தமிழ் இலக்கியத்திற்கும் ஆக்கம் தரும் வகையில் அயராது பணியாற்றி வருகின்றது மணிவாசகர் நூலகம்.

நூல் வெளியீட்டுக்கான வசதிகள் அதிகமில்லாத ஒரு நகரில் அமைந்துள்ள இப்பதிப்பகம் இதுவரை வெளியிட்டுள்ள பலதுறை நூல்களின் தகுதியையும் எண்ணிக்கையையும் பார்க்கும்போது அதை ஒரு பெரும் சாதனை என்றே குறிப்பிட வேண்டும்.

இப்பதிகம் வெளியிட்டுள்ள சிறுவர் நூல்கள் அனைத்தும் விற்பனையாகிவிட்டன என்பதைக் கேட்டு மகிழ்கிறேன். தொடர்ந்து மேன்மேலும் பல சிறுவர் நூல்களை வெளியிட்டுச் சிறுவர் இலக்கியம் சிறப்புற உதவுமென நம்புகின்றேன்.

**ஊரன் அடிகள்,**
சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம், வடலூர்.

தில்லைத் திருவீதி நான்கிலும் உடம்பால் புரண்டு வலம் (அங்கப் பிரதட்சணம்) வந்தவர் அப்பர். அப்பருக்குப் பின்பு அவ்வாறு சிதம்பரம் தேரோடு வீதி நான்கிலும் புரண்டு வலம் வந்தவர் ஒருவர். அவர்தாம் மணிவாசகர் நூலகம் மெய்யப்பரின் தந்தை குங்கிலியம் பழ. சண்முகனார். தில்லையில் மட்டுமோ? பூர்வஞான சிதம்பரமாம் தில்லையினின்று உத்தரஞான சிதம்பரமாம் வடலூர் வந்தபின் வடலூரில்

வள்ளலார் நிறுவிய சத்திய தருமச் சாலையையும் சத்திய ஞான சபையையும் யாம் காணப் புரண்டு வலம் வந்தார். எட்டாண்டுகளுக்கு முன்னர் 1969ல் இப்போது தருமபுர ஆதீன கர்த்தராயுள்ளவர்கள் தலைமையில் சென்னையிலிருந்து திருவாமூருக்குச்சென்ற பாதயாத்திரையில் எம்மோடு வந்தார். திருவைந்தெழுத்தை உச்சரித்தவாறே உயிர்நீத்தவர் குங்கிலி யத்தின் துணைவியார். இத்தாய் தந்தையர்க்குச் சற் புத்திரராய்த் தோன்றியமையும் மெய்யப்பர் பெற்ற பேறே.

தந்தையார் பர்மாவில் இருந்தபோது தாயாரின் திருக் கரத்தாற் பெற்ற சொற்ப முதல் கொண்டு தொடங்கியது மணிவாசகர் நூலகம். குடும்பத்தை, உடல்நலத்தை, வருவாயை மறந்து, நல்ல, தரமான தமிழ் நூல்கள் வெளிவர வேண்டும் என்ற ஒன்றினையே நினைந்து பல இன்னல்களுக் கிடையே, பொறுமையோடு வளர்க்கப் பெற்றுப் பதினாறு ஆண்டுகள் நிறையப் பெறுகிறது. பதினாருண்டு அகவை, மணப்பருவம். மணிவாசகர் நூலகம் இப் புண்ணியப் பதினாருண்டில் திருமகளை மணந்து என்றும் பதினாருய் வாழ்க. மெய்யப்பர், நூல் வெளியிடுவோர் மட்டுமல்லர். நூலாசிரியரும் ஆவர். ‘ கபிலர் ’ ‘ தாகூர் ’ இவர் செய்தன. புகழ் பெற்ற முதிர்ந்த நூலாசிரியரது நூல்களையே அதிக விற்பனை நோக்கங் கருதி வெளியிடுதல் வெளியீட்டார் தொழின்முறை வழக்கம் மணிவாசகர் நூலகத்தாரோ நல்லறிவுள்ள இளைஞர்கள் பலரை ஊக்கி, அவர்கள் முதன் முதலாக எழுதிய நூல்களையும் வெளியிட்டுப் பலரை ஆளாக் கிற்று. அப்படி ஆளானோர் பின்பு எழுதிய நூல்களை வெளியிடப் பெருநிறுவனங்கள் முன்வந்தன. பலருக்கு ஏணியாக இருந்ததும் இருப்பதும் மணிவாசகர் நூலகம். ‘ உரையாசிரியர்கள் ’ என்ற நூலை எவ்வளவு பாராட்டினாலும்

தகும். 'தமிழும் தத்துவமும்' இலக்கிய உலகுக்கு மட்டு மன்றிச் சமய உலகுக்கும் ஒரு புது விருந்து. பதினொண்டுப் பணியில் பரிசு பெற்ற நூல்கள் ஆறு. தமிழக அரசின் பரிசு மூன்று. இந்திய அரசின் பரிசு இரண்டு. சாகித்திய அகடாமி பரிசு ஒன்று. எமது நூல் (இராமலிங்க அடிகள் வரலாறு) தமிழக அரசின் பரிசு பெற்ற அதே நாளில் மணிவாசக நூலக நூலொன்றும் பரிசு பெற்றது, யாம் கண்ட கண்ணுக்கினிய காட்சி. நூல் வெளியீட்டைத் தொழிலாக மட்டும் செய்தால் பணம் குவியும். தொண்டாகவும் கருதிச் செய்தால் பணம் குறையும். பொருள் குவிக்க எண்ணாது, குறைவதையும் பொருட்படுத்தாது, தொண்டு முக்கால் தொழில் கால் என்று செய்வது மணிவாசகர் நூலகம். பரிசு பெறும் நூல்கள் பலவற்றை வெளியிட்டு, வெள்ளிவிழா, பொன்விழா, வைரவிழாக் கண்டு நீடு நிலவுக.

பால் நைவேத்தியம் என வழங்கும் அதிகாலை வழிபாடாம் கூத்தன் திருப்பள்ளியெழுச்சியை நாடோறும் தரிசித்து மகிழும் திரு. மெய்யப்பனார், நூற்பதிப்புக்கலையை ஆய்ந்து டாக்டர் பட்டம் பெற்று, மாணாக்கர் பல்லாயிரவர்க்கும், நூலாசிரியர் பன்னூற்றுவர்க்கும் வெற்றித்துணைவனாய் நூறு ஆண்டுகள் குடும்பத்துடன் வளம்பல பெற்று வாழ்வாங்கு வாழ்க. வாழ்க. வாழ்க. வள்ளலார் கழல்வாழ்த்தல் வாழ்வாவதே.

## புலவர் கீரன். லால்குடி.

அறிவு சுற்றங் காக்கும் கருவி. அவ்வறிவுக்கு நூலே கருவி. நூல் வெளியீடு ஒரு கலை. அக்கலையில் வல்லவர், திரு. ச. மெய்யப்பன் அவர்கள். மணிவாசகர் நூல்நிலையம் என்ற பெயரில் அழகிய, அடக்கமான, நூல்கள் பலவற்றை வெளியிட்டுள்ளார். இலக்கண, இலக்கிய நூல்கள் பலவும் இங்கு மட்டுமே கிடைக்கின்றன. இது என் அனுபவம். பதினைந்து ஆண்டுகள் கடந்து, வாலிபப் பருவத்தை அடைந்துள்ள நூலகம் மேலும் வளர இறைவனைப் பிரார்த்திக்கின்றேன்.

## என். கிரிதாரிபிரசாத், கோயமுத்தூர்.

தங்கள் நூலகம் சென்ற பதினைந்து ஆண்டுகளாக அரும்பணி ஆற்றியுள்ளது. தாங்கள் இதுவரை வெளியிட்டுள்ள பல நூல்களைப் படிக்கும் பேறு பெற்றவன் நான். கம்பர் அரும்பதவுரை அகராதி - மணிவாசகர் கட்டுரைகள் - நாவுக் கரசரின் நற் கருத்துக்கள் - அனைத்தும் தாங்கள் தமிழுக்கு வழங்கிய சீதனங்கள். தங்கள் நற்பணியால் தமிழன்னை கவி நடம் புரிகின்றாள். மேலும் தாங்கள் தொடர்ந்து இதுபோன்ற விருந்துகளைத் தமிழுலகிற்குப் படைக்க வேண்டுகிறேன். தங்கள் இலக்கியப் பணியை - இறைபணியை உவகையுடன் வாழ்த்துகிறேன்.

## டாக்டர் கே. மீனாட்சிசுந்தரம், தமிழ்ப்பேராசிரியர்.
சரபோஜி அரசினர் கலைக்கல்லூரி, தஞ்சாவூர்.

என் அருமை மாணவர்களுள் ஒருவர் சீரிய தமிழ்த் தொண்டாற்றும் நெறிகளுள் ஒன்றாகிய நூலகப் பணியினைத் தொடர்ந்து 15 ஆண்டுகளாகச் செய்து வருவது என்னை மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கச் செய்கிறது. அச்சேற்றித் தமிழ் நூல் வெளியிடுவோர்க்குப் பெரிய இலாபம் இல்லையாயினும் பெருந் தொண்டுள்ளம் தமிழுக்குப் பெருந்தொண்டு செய்யத் தூண்டுகிறதென்றே அறிஞர் கொள்வர்.

பதினைந்து ஆண்டுகளாகப் பல்வேறு நூல்களை வெளியிட்டுள்ள பணியினை மனநிறைவுடன் பாராட்டுகிறேன். நீங்கள் நீண்ட நாள் இவ்வுள்ளத்துடன் வாழ்ந்து தமிழ்ப்பணி ஆற்றவேண்டுமென வாழ்த்துகிறேன். உள்ளம் நெக்குருகப் பாடிய வாசகரின் பெயர் தாங்கிய நூலகம், நல்ல பணிகளை மேலும் மேலும் ஆற்ற வேண்டும் என நெஞ்சார வாழ்த்துகிறேன்.

## டாக்டர் என். சுப்புரெட்டியார், திருப்பதி.

மணிவாசகர் நூலகத்திற்குப் புத்தாண்டு வாழ்த்துக்கள். மார்க்கண்டேயராண்டுகளாக நூலகம் செய்துள்ள தமிழ்ப்பணி தமிழ் மக்களால் பாராட்டுதற்குரியது. மூலவிசைபோல் இயங்கும் திரு. ச. மெய்யப்பன் ‘பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து’ ஒல்லும் வகையெல்லாம் நூலகத்தின் வளர்ச்சிக்கு உதவி வருவதைத் தமிழ் கூறு நல்லுலகம் நன்கு அறியும். ஆராய்ச்சி நூல்களையும், திறனாய்வு நூல்களையும் பெருக்கித் தமிழ் மொழிக்குப் புத்துயிர் அளிக்கும் நூலகம் இது. ‘பைந்தமிழ்ப் பின் சென்ற பசுங் கொண்டலின்’ திருவருளும் பெரியோர்கள் ஆசியும் நூலகத்திற்குக் கிட்டுவதாக என வாழ்த்துகின்றேன்.

## வ. சுப்பையாபிள்ளை, திருநெல்வேலி.

### பயனுள்ள பணி, பல்லாண்டு வாழ்க

புற்றீசல்கள் போல் பதிப்பகங்கள் பல பெருகிவரும் இந்நாளில் பயனுள்ள தரமான நூல்களை வெளியிடும் பதிப்பகங்கள் மிக மிகக் குறைவு இந்நிலையில் கடந்த 16 ஆண்டுகளாகத் தக்க பேராசிரியர்களைக் கொண்டு தரமான நூல்களை அழகிய முறையில் வெளியிட்டுப் பதிப்புத்துறைக்கும் தமிழ்த்துறைக்கும் சிறந்த பணியாற்றி வரும் மணிவாசகர் நூலகத்தின் முயற்சி பெரிதும் பாராட்டத்தக்கது. குறிப்பாகத் திரு. மெய்யப்பன் அவர்களின் உழைப்பு, ஊக்கம் ஆகியவை மணிவாசகர் நூலக வளர்ச்சிக்குக் காரணமெனில் அது மிகையாகாது. மணிவாசகர் நூலகம் மேலும் வளர்ந்து தமிழ் மொழிக்கும் நாட்டுக்கும் தொண்டு செய்ய அம்மை அம்பல வாணர் அருள் புரிவாராக.

தமிழாகரர், வித்துவான்,
**செ. வேங்கடராமச் செட்டியார்,**
அண்ணுமலைப் பல்கலைக் கழகம்.

மணிவாசகர் நூலகம் என்பது சிதம்பரத்தில் உள்ள சிறந்த புத்தக விற்பனையகமும் புத்தகப் பதிப்பகமும் ஆகும். இந்த நூலகம் தொடங்கிப் பதினைந்து ஆண்டுகள் நிறைந்து புண்ணியப் பதினாறாண்டில் எடுத்தடி வைக்கின்றது—காலையாம் பருவம் கவினுற எய்துகின்றது. இந் நூலகத்தைக் கண் போலக் காத்து நடத்துகின்றவர் என் கெழுதகை நண்பர் திரு. ச. மெய்யப்பன் எம். ஏ. ஆவர். பதிப்புக்கலையைப்பற்றிய ஆழ்ந்த சிந்தனை இவர்க்குண்டு. வனப்பு மிக்க வடிவமைப்பில் நூல்களை வெளியிடும் ஆர்வம் இவர்க்கு மிகுதியாக உண்டு. இதனை அவர்தம் மணிவாசகர் நூலகப் பதிப்புகளைப் பார்த்த அளவில் அறியலாம். தமிழ்நாட்டில் தமிழ் பற்றிய கூட்டங்களில் எல்லாம் இவரைக் காணலாம். தகுதிமிக்க எழுத்தாளர்களெல்லாம் இவர்க்குப் பழக்கமானவராகவே இருப்பர். நூலெழுதும் ஆசிரியர்களின் திறமறிந்து அவ்வவர்க்கு ஏற்ற நூலை எழுதும்படி தூண்டி எழுதுவிக்கும் இயல்பினர். உருள்கின்ற குறுவட்டைக் குணில்கொண்டு துரப்பதுபோல் இவர் செய்யும் தூண்டுதலால் ஆசிரியர் பலர் நல்ல நூலாசிரியராகத் திகழ்கின்றார்கள் எனலாம். உரையாசிரியர்கள் என்ற நூலை மு. வை. அரவிந்தன் எம், ஓ. எல். அவர்கள் எழுதியது இவர்தம் தூண்டுகோலினால்தான் என்பது உண்மை. அந் நூல் தலைசிறந்த நூலாக — ஆராய்ச்சிக் கருவூலமாகத் திகழ்வதைத் தமிழுலகம் அறியும். இவ்வாறு தமிழ்த்தாயின் தொண்டு பல புரியும் மணிவாசகர் நூலகம் வளர்ச்சி பெற்று மக்கட்குத் தமிழ் உணர்ச்சி பெருகப் பல்லாண்டு பணிபுரிவதாக.

திரு அ. சொக்கலிங்கம், எம். ஏ, எம். லிட்.,
முதல்வர், யாதவர் கல்லூரி, மதுரை.

தரமான புத்தகங்களை வெளியிடுவதில் தலைசிறந்து நிற்கும் நமது மணிவாசகர் நூலகம் 'என்றும் பதினாறாய்' எழில் குன்றாது வாழ வாழ்த்துகிறேன். இலக்கிய உலகின் புத்தகச் சந்தையில் கடந்த பதினாறு ஆண்டுகளாகத் தாங்கள் போடும் எதிர்நீச்சலை நன்கு அறிவேன். வணிகநோக்கை மறந்து இலக்கியத் தரத்தைப் பாதுகாப்பதே தங்களின் நோக்கமாக இருந்தது. இதே நோக்கம் என்றும் அமைவதாக. வான் கலந்த மாணிக்கவாசகரின் திருநாமத்தைத் தாங்கியுள்ள தங்களின் நூலக வெளியீடுகள் உவட்டாமல் இனிக்கின்றன. இனிப்பு தொடரட்டும். தங்கள் பணி சிறக்கட்டும். மணி மணியான வாசகர்களை உருவாக்கும் திருப்பணியில் தங்கள் நூலகமும் பங்கு கொள்ளட்டும்.

டாக்டர் சுப. அண்ணாமலை, எம். ஏ., எம். லிட்., பிஎச். டி.,
முதல்வர், தியாகராசர் கல்லூரி, மதுரை.

அண்ட கோள மனிதனின் இதயப் பகுதியாம் சிதம்பரத்தில் தோன்றி நிலவித் தமிழ்ப்பணி யாற்றி வரும் 'மணிவாசகர் நூலகம்' பதினைந்தாண்டுகள் பணி முடித்தமை அறிந்து மகிழ்வுடன் பாராட்டுகிறேன். மணிவாசகர் நூலகத்தின் பதிப்புக்கள் உயர்ந்த இலக்கியத் தரமும் அச்சழகும் கட்டுறுதியும் வாய்ந்தவை. தம் இருப்பால் நூலகங்களின் மதிப்பினை உயர்த்துபவை. பல்கலைக் கழகங் களின் வரவேற்பைப் பெற்றவை. இத்தகு சிறந்த மணிவாசகர் நூலகம் இன்னும் பல்லாண்டுகள் பணியாற்றிப் பல்லாயிரம் தமிழ் நூல்களை வழங்குவிக்க வாழ்த்துகிறேன்.

பேராசிரியர் **க. த. திருநாவுக்கரசு**, எம். ஏ. எம். லிட்.
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

மணிவாசகர் நூலகம் தில்லையில் தோற்றுவிக்கப்பட்ட காலத்தில் அருகிலிருந்து கண்டு மகிழும் வாய்ப்பைப் பெற்றவன் நான். கடந்த பதினைந்து ஆண்டுகளில் மணியான வகையில் பல்வேறு துறையில் மணிவாசகர் நூலகம் பணி யாற்றி வருகிறது. அதனுடைய வளர்ச்சி படிப்படியானது. ஆயினும் சீரானது; சிறப்பு மிக்கது

இலக்கண இலக்கிய ஆராய்ச்சி நூல்களை மட்டும் அல்லாமல் அறிவியல், தொழில் நுட்பவியல் சார்பான நூல்களையும் சிறுவர்க்கு ஏற்ற சிறப்புமிகு நூல்களையும் வெளியிட்டுத் தமிழ் அன்னைக்குப் புதிய பொலிவினை அது ஊட்டி வருவது போற்றத் தக்க செயலாகும்.

இந் நூலகத்தின் வெளியீடுகள் சில, மைய மாநில அரசு களின் பரிசுகளைப் பெற்றிருப்பது அதனுடைய திட்டமிட்ட செயல் முறைக்குச் சிறந்த சான்றாகும்

கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பியைப் போன்று இந்நூலகத்தின் உறுதுணையாளர் பல அறிஞர்களை அணுகி, அரிய நூல்களைப் பெற்று, அவற்றை அழகிய முறையில் வெளியிட்டு வருகின்றார். அவருக்கு நம்முடைய பாராட்டு என்றும் உரித்தாகும்.

தமிழகத்தின் தலைநகரில் ஒரு கிளையினைத் திறந்ததோடு அமையாது, பல்வேறு புதிய ஊர்களிலும் புதிய துறைகளி லும் இப்பதிப்பகம் காலெடுத்து வைக்க முன்வர வேண்டும். அம்முயற்சிக்கு அன்பர்களின் ஆதரவைத் திரட்ட நண்பர் முயல்வாராக. வளர்க அன்பரின் பணி.

**சு. செல்லப்பன்**, தனி அலுவலர்,
தமிழ் வளர்ச்சி இயக்ககம், குறளகம், சென்னை.

இடமருங்கு தனி நாயகி காண, ஏழ்பெரும் புவனம் உய்ய,எடுத்த நடம் நவின்று, அருள் சிலம்பொலி போற்றும் ‘ அன்புகூர் தில்லையம்பதியின்கண், மணிவாசகப் பெருமானின் திருப்பெயர் பூண்டு, இடையரு இலக்கியத் தொண்டாற்றி வருகின்ற தங்கள் நூலகத்தின் பணி நாளும் சிறக்க, மேலும் தொடர்க என உளமார விழைந்து வாழ்த்துகின்றேன்.

கடந்த பதினைந்து ஆண்டுகளாய், கனன்று எழும் அறிவுப் பசியைத் தீர்க்க, ‘ கம்பர் விருந்து ’, ‘ குறள் விருந்து’ , ‘ மாணிக்க விருந்து ’ முதலிய இலக்கிய அமுதங்களைப் படைத் தளித்துள்ள தங்களின் தளராத் தொண்டினைத் தமிழகம் என்றும் போற்றும்.

என்றுமுள தென்தமிழின் இலக்கியப் பேழையினைத் திறந்து, உள்ளுறை இலக்கிய மாமணிகளின் ஒளி எங்கும் வீச, யாவருமறிய ‘ இலக்கிய விளக்கம் ’ செய்துவரும் தங்கள் பணியை நாடே போற்றும். நல்லவர் ஏடும் போற்றும்

‘ வாழ்க்கை விளக்கம் ’ பெற ‘ வேள்வித் தீ ’ மூட்டி, ‘ கம்பர், கபிலர், தாகூர், சேக்கிழார் ’ பெருமான் போன்ற ‘ சான்றோர் ’ களின் ‘ சிந்தனைக் களங்களில் நின்று தமிழ் இலக்கிய வரலாற்றினை ’ விரிவுபடுத்திய தங்களின் நூலகம், ‘ இலக்கிய வானில் சிந்தாமணியாய்த் திகழ்கிறது என்பதில் ஐயமில்லை!’

‘ கந்தகோட்டம் ’ வாழ் ‘ கந்தனே — செந்தில் முருகனே’ துணையென நம்பி, பணம் பெறுவதையே குறியாகக் கொள்ளா மல், மக்கள் பயன்பெற வேண்டுமென்ற ‘ காந்தீய நெறி ’

பூண்டு 'இலக்கியமும் வாழ்க்கையும்' 'செம்மை நலம்' பெற 'அறந்தரு சிந்தை' கொண்டு தொண்டு ஆற்றி வரும் மணிவாசகர் நூலகம் வண்ண மதியின் வளர்கலை யொப்ப நாளும் நாளும் வளர்ந்து ஒளி விரித்துப் பயன் பெருக்கிச் சிறப்பதாகுக!

டாக்டர் **பொன். கோதண்டராமன்,**
சென்னைப் பல்கலைக்கழகம்.

வணக்கம். மணிவாசகர் நூலகம் தொடங்கிப் பதினைந்து ஆண்டுகள் நிறைவு பெற்றமை அறிந்து மகிழ்கிறேன். இந்தப் பதினைந்து ஆண்டுகளில் மணிவாசகர் நூலகம் ஆற்றி யுள்ள தரமான உயர்ந்த தமிழ்ப் பணிகளைத் தமிழுலகம் நன்கு அறியும்.

புதிய வழியில் சிந்தித்துப் புதிய புதிய நூல்களை உருவாக்கித் தமிழ் வளர்ச்சிக்குத் துணைபுரிய வேண்டுமென எண்ணும் எல்லோருக்கும் தன்னால் இயன்ற வகையிலெல்லாம் துணைபுரிந்து வரும் மணிவாசகர் நூலகத்தின் பணிகள் தொடரட்டும்.

வாழ்க மணிவாசகர் நூலகம்

## பேராசிரியர் டாக்டர் தா. ஏ. ஞானமூர்த்தி, கோவை.

வணக்கம். இலக்கியம் மக்கள் உள்ளத்தில் நல்லுணர்வுகளைப் பெருக்கி அதனைப் பயன்படுத்தவல்லது. சங்ககாலம் முதல் இக்காலம் ஈருகத் தோன்றிய தமிழ் இலக்கியங்கள் நவில்தொறும் நயம் பயப்பவை. இத்தகைய இலக்கியங்களின் நுட்பங்களை விளக்கும் நூல்கள் பலவற்றை மணிவாசகர் நூலகம் வெளியிட்டுத் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு இணையற்ற பணியினை ஆற்றியுள்ளது. மணிவாசகர் நூலகத்தின் கடந்த 15 ஆண்டுகால இலக்கியப் பணியினை நோக்குங்கால் தமிழ்ப் பணியே அதன் தலைநோக்கமென்பது நன்கு புலனாகிறது. மணிவாசகர் நூலகத்தார் போன்றவர்கள் இருப்பதால்தான் தரமான இலக்கிய நூல்களை நாம் காணமுடிகிறது. மணிவாசக நூலகத்தின் தமிழ்ப்பணி மேன்மேலும் வளர்ச்சியுற்றுச் சிறப்புறுவதாக. மணிவாசகர் நூலகம் வாழ்க.

**கு. சுந்தரமூர்த்தி,** எம். ஏ.,
முதல்வர், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.

மணிவாசகர் நூலகம் கடந்த 15 ஆண்டுகளாகத் தொடர்ந்து தமிழ்ச் சைவ உலகிற்குத் தொண்டாற்றி வந்துள்ளது. தமிழ் நூல்களை வெளியிடுவதும், விற்பனை செய்வதும் எத்துணை யிடர்ப்பாடுடையதென அத்துறையி லுள்ளார் நன்கறிவர்.

இந்நிலையில் நம் மணிவாசக நூலகம் வணிக நோக்கின்றித் தொண்டுள்ளமே பற்றி நூல்களை வெளியிட்டு வந்துள்ளது என்பதை யறிய மகிழ்கின்றேன். இதற்குக் காரணம் அதன் நிறுவனரும், என் கெழுதகை நண்பருமான திரு. ச. மெய்யப்பன் எம். ஏ, அவர்கள் ஆவர். அவர்களும், அவர்தம் நிறுவனமும் நீடூழி வாழ்ந்து தமிழுலகிற்கும் சமய உலகிற்கும் தொடர்ந்து தொண்டாற்றி வரத் திருவருளை இறைஞ்சுகின்றேன்.

வளர்க. வாழ்க. திருவருள் முன்னிற்க.

டாக்டர் **கு. தாமோதரன்,**
தமிழ்த்துறைத் தலைவர்,
வெங்கடேசுவரா பல்கலைக் கழகம், திருப்பதி.

## பணி சேர்க்கும் மணிவாசகர்

தில்லைநின்ற நூலகமே சிறந்த தொண்டின்
திறம்வியந்து பாராட்டச் சொல்லே இல்லை
இல்லையென்ற இடரறியா வண்ணம், என்றும்
எழினூற்கள் தமிழுலகம் ஏற்கத் தந்து
முல்லையென்றே மணம்விரித்தாய், இலக்கி யத்தேன்
முத்தமிழர் மனம்குளிர ஊட்டி விட்டே
எல்லையற்ற புகழ்விரித்தாய், இந்நா ளுன்றன்
ஈரெட்டாம் இளமைகண்டே இன்பம் கொண்டோம்.
மணிவாச கர்நிலையம் பெயரைக் கண்டாய்
மன்பதையில் தமிழ்ப்பணியால் புகழை மொண்டாய்
மணிமேக லைப்பெண்ணுள் பாத்தி ரம்போல்
மணிமணியாய் நூலளித்துப் பெருமை பெற்றுய்
அணிமேவும் இளம்பெண்ணைப் போல உன்னை
அலங்கரிக்கும் மெய்யப்பன் மற்றும் மற்றும்
பணிமேவும் நல்லவர்கள் தொண்டு வாழப்
பலகாலம் வாழியவே வாழி வாழி

## வி. எஸ். வி. ராகவன், சென்னை.

பதினாறுண்டு என்பது என்றும் இளமையோடிருத்தல் என்றே பொருள்படும் சொல்லாகும். மார்க்கண்டேயர் பெற்ற 16 ஆண்டு இளமை வரம்போல. மணிவாசகர் நூலகம் என்பது மணிபோன்ற நூல்களை வெளியிடுபவர். மற்றும் மணி என்றாலே கடிகாரம் நம் கவனத்துக்கு வரும். கடிகாரமுள் எப்பொழுதும் வலமாகச் சுற்றிக்கொண்டேயிருக்கும்-அதாவது முன்நோக்கியே சென்று கொண்டிருக்கும். என்றைக்குமே பின்னோக்கி ஓடாது. அதுபோல, மணி எனும் சொல்லை முதன்மையாகக் கொண்ட மணிவாசகர் நூலகம் முன்னேற்றத்துக்கான அறிவுகொளுத்தும் நூல்களைத் துணிகரமாக வெளியிடுபவர் என்றே அதன் பெயர் உணர்த்துகிறது.

உயர்திரு. ச. மெய்யப்பன் எம். ஏ. அவர்கள் அண்ணமலைப் பல்கலைக்கழகத் தமிழ்விரிவுரையாளர். ஓயாது அயராது உழைப்பவர்; பல நூல்களுக்கு ஆசிரியர். தமிழ் ஆராய்ச்சியிலும், வரலாற்று நூல்களிலும் நாட்டம் பெருகி வரும் இந்நாளில் காலத்துக்கேற்ற பணியாய் அரிய ஆராய்ச்சி நூல்களை வெளியிடுவதில் பேரார்வம் உள்ளவர். இவற்றை ஊதிய நோக்கு ஒன்றையே கருதி வெளியிடாது இலட்சிய நோக்குடனே வெளியிடும் இலட்சியவாதியாவார்.

நல்ல தமிழ் நூல்கள் வெளியிடுவதையே வாழ்வு நோக்கமாகக் கொண்டு, அரிய ஆய்வு நூல்களைத் துணிகரமாக வெளியிடும் அன்பர் உயர்திரு. ச. மெய்யப்பன் எம் ஏ அவர்கள் இன்னும் பல்லாண்டு வாழ்ந்து, மணி மணியான நூல்களைத் தமிழ் அன்னைக்குக் காணிக்கையாக அளித்து உதவுமாறு அன்னை ஸ்ரீவைஷ்ணவி தேவியைப் பிரார்த்திக்கின்றேன். வாழ்க மணிவாசகர் நூலகம்! அதற்கு வைரத் தூணாய் அமைந்த உயர்திரு ச. மெய்யப்பன் எம். ஏ அவர்கள் வாழ்க! வாழ்க! அண்ணமலை அகத்தியரே! இன்னும் ஒரு நூற்றாண்டு இரும்.

**டாக்டர் அ. ம. பரிமணம்,** எம். ஏ., எம். லிட்., பிஎச். டி.
முதுகலைத் தமிழ்ப்பேராசிரியர், பூண்டி.

நூல் வெளியீட்டுப் பணியில் பதினைந்து ஆண்டுகளாக நல்ல தொண்டினைச் செய்துவரும் மணிவாசகர் நூலகத்தின் தமிழ்ப்பணியை மனமுவந்து பாராட்டுகின்றேன்.

தமிழுக்கு அணிசேர்க்கும் தரமான நூல்களை அணி அணியாக வெளியிட்டுத் தம் வெளியீட்டுப் பட்டியலோடு புகழையும் நூலகம் பெருக்கி வந்துள்ளது.

நல்ல தமிழார்வமும், நூல் வெளியீட்டநுபவமும் எல்லோரோடும் இனிது கலந்து பழகும் இயல்பும் எளிமையும் அன்பும் மிகக் கொண்ட அன்பர் ஒருவரை உரிமையாளராகப் பெறும் சிறப்பினை மணிவாசகர் நூலகம் பெற்றுள்ளது.

எங்கெல்லாம் தமிழ் முழக்கம் (தமிழ் விழாக்கள், கருத்தரங்குகள் - ஆய்வரங்கங்கள்) கேட்கின்றதோ அங்கெல்லாம் நண்பர் மெய்யப்பன் அவர்களைக் காணலாம். அங்கும் அவர்தம் நூலகத் தொண்டு தொடரும். மணிவாசகர் நூலகம் ஒரு செந்தமிழ்த் தேன்கூடு. சந்தமிடு செந்தமிழ்த் தேன்நாடி வந்தவர்க்கெல்லாம் அது சொந்த வீடு. மணிவாசகர் நூலகத்தின் தேமதுரத் தமிழ்த்தொண்டு பல்லாண்டு தொடர்ந்து மிக்க பயன் நல்க வேண்டுமென வாழ்த்துகிறேன்.

**தி. பாக்கியமுத்து,** பதிப்புத்துறைச் செயலாளர்,
கிறித்தவ இலக்கிய சங்கம், சென்னை.

மணிவாசகர் நூலகத்தின் பதினாறு ஆண்டு நிறைவு கேட்டு மகிழ்ச்சியடைகிறேன். பதிப்பகங்கள் ஒரு நாட்டின் அறிவுக் களஞ்சியங்கள் என்பதற்கிணங்கத் தரமான தமிழ் நூல்களைத் தாங்கள் வெளியிட்டு வந்திருக்கிறீர்கள். பரிசு பெற்ற தங்கள் வெளியீடுகளான ஆறு நூல்களும் தங்களின் வெளியீடுகளின் தரத்திற்குச் சான்றாகத் திகழ்கின்றன. என்றும் பதினாறு என்ற இளமைத் துடிப்புடன் உங்கள் பணியும் தொண்டும் சிறந்து விளங்குவதாக.

**முகமது ஆரிப் மியான்,** எம். ஏ., பி எட்.,
அரசினர் உயர்நிலைப்பள்ளி, பாண்டிச்சேரி.

நல்ல தமிழ் வளர்க்க வல்ல எழுத்தாளர் பல்லோர் படைப்புக்களைப் பதித்து வெளியிட்டு நாளும் தமிழ் வளர்க்கும் மணிவாசகப் பதிப்பகத்தார் பணி யென்றும் வளர்வதாக. தமிழைப் பணமாக்குவோர் பலரிருக்கும் இந்நாளில் வெல்லும் தமிழுக்காக வீறுடன் பணியாற்றும் மணிவாசகர் நூலகத்தார் என்றும் வாழியர். அறிவியல் கண்சிமிட்டும் அவலநிலை போக்கி ஆற்றல்மிகு விஞ்ஞானம் வெள்ளமெனப் பாய நூலகத்தார் பணிசெய்ய வேண்டுவேன் யானே.

## வானதி திருநாவுக்கரசு

மணிவாசகர் நூலகம் என்ற பூந்தோட்டத்தில் மலர்ந்த இலக்கிய மலர்களை நுகர்ந்திருக்கிறேன். அவை யாவும் நல்ல உயரிய மணமுள்ள மலர்கள்.

இலக்கிய மலர்களை மாலையாகத் தமிழ்த் தாய்க்குத் தொடர்ந்து தொகுத்தளித்து வருபவர் நண்பர் திரு. ச. மெய்யப்பன் அவர்கள். நல்ல தமிழ் அறிஞர். பண்புள்ளம் படைத்தவர்.

பல்கலையும் கற்றவரைப் பதிப்பாசிரியராகக் கொண்ட பதிப்பகம்தானே கல்விப்பயிரை நன்கு வளர்க்க முடியும்.

பதினாறு ஆண்டுகள் தன்னைத் தூய தமிழ்ப்பணிக்கு ஆளாக்கிக் கொண்ட மணிவாசகர் நூலகம், மேலும் பல்லாண்டுகள் தமிழ்ப் பணியாற்றத் துடிக்கிறது. வீறுநடை போடுகிறது. அது வெற்றிகளைக் குவிக்கும் என்பது ஐயமே இல்லை. காரணம் அதன் பதிப்பாசிரியர் திரு. ச. மெய்யப்பன் அவர்கள் நல்ல சுறுசுறுப்புடையவர். திட நெஞ்சமும், தமிழ் நெஞ்சமும் கொண்டவர். துணிவும் பணிவும் ஒருங்கே கொண்டவர். அறிவு பூர்வமாக நோக்க வல்லவர். நல்லறிவு மிக்க தரமான இலக்கிய நூலையே மணிவாசகர் நூலகத்தின் மூலம் தமிழ் வாசகர்களுக்கு வழங்க வேண்டுமென்ற நற் கருத்துடையவர்.

மணிவாசகர் நூலகம் மேலும் பல நல்ல தமிழ் நூல்களைப் பல்கிப் பெருக்கித் தமிழ் மக்களுக்கு இலக்கிய இன்பத்தினையும் பல்துறை நல்லறிவினையும் தொடர்ந்து நல்கி, பல்லாண்டுகள் வெற்றிகரமாகப் பணியாற்ற எல்லாம் வல்ல தில்லைக் கூத்தனைப் பிரார்த்தித்துக் கொள்கிறேன். வணக்கம். வாழ்த்துக்கள்

## டாக்டர். இ. அண்ணாமலை, மைசூர்

மணிவாசகர் நூலகத்துக்குப் பதினைந்து ஆண்டுகள் நிறைவது அறிந்து மிகுந்த மகிழ்ச்சி. மாணவர்களுக்குத் துணை நூல்கள் வெளியிடுவதிலும், ஆராய்ச்சிக்குத் துணையாகும் நூல்களை வெளியிடுவதிலும், மணிவாசகர் நூலகம் பல வெற்றிகளைச் சாதித்திருக்கிறது. அரசின் பரிசுகள் மட்டுமன்றிப் படிப்போரின் பாராட்டுகளையும் இவ்வெளியீடுகள் பெற்றிருக்கின்றன. தரமான நூல்களைத் தேடிப் பெற்றுத் தரமான முறையில் வெளியிட்டுத் தரமான தமிழாராய்ச்சி வளர உதவும் மணிவாசக நூலகம் மணியான வாசகர்களால் பல்லாண்டுகளுக்கு ஆதரிக்கப்படும் என்பதில் ஐயமில்லை.

## கண. முத்தையா, தமிழ்ப் புத்தகாலயம், சென்னை.

மணிவாசகர் நூலகம் 16 ஆண்டுகள் நிறைவு பெற்று விட்டது என்பதையறிந்து மிக்க மகிழ்ச்சியடைகிறேன். இந்த 16 ஆண்டுகளில் பதிப்புத் துறையில் மணிவாசகர் நூலகத்தின் சேவை குறிப்பிடத்தக்கது. மணிவாசகர் நூலகம் மேலும் மேலும் வளர்ச்சி பெற்றுத் தமிழ் மொழிக்கும் இலக்கியத்திற்கும் சிறந்த சேவைகள் செய்ய வேண்டுமென்று மனப்பூர்வமாக வாழ்த்துகிறேன்.

## எஸ். கே. இராமராசன், வேலூர்.

பொதியமலை தனில்மேவிப் புவியனைத்தும் இன்பமுற
மதியளித்து முப்பாலாம் மாசற்ற செங்கோல்கொள்
தண்டமிழ்த்தாய் உவப்பெய்தத் தகவொடுபன் னூல்புரக்கும்
தொண்டுகளை உவந்துபுரி தூயகலை நூலகமே.

மண்ணுலகைச் சிவமாக்கும்
வாசகரின் பேர்பூண்டு
கண்ணளித்தாய்! எங்கட்குக்
கதியளித்தாய்! மதியளித்தாய்!

மெய்யப்பர் ஆட்சியில்நீ
மேவியருந் தமிழ் வழங்கி
உய்யப்பே ருணர்வளித்தாய்
ஒலியளித்தாய் நன்மதிக்கே

பயனற்ற நூல் வழங்கிப்
பணம்பெருக்கல் தீதென்று
பயன்மிக்க நூல் வழங்கிப்
பசுந்தமிழுக் குணர்வளித்தாய்

கற்றவர்தம் இதயத்துக்
கலைவளர்க்கும் தீபமெனப்
பெற்றியுடன் நீவழங்கும்
பெருநூல்கள் முற்றும் தேன்

சிந்தனையைக் களமாக்கித்
தெரிந்திட்ட பொன்மணிகள்
சந்ததமும் எம்முளத்தில்
தனியுணர்வுப் பெட்டகமாம்

சங்கம் புரியும் தனிச்செயல்புரிய
வந்தனை உன்னை வாழிய வாழிய
நன்றே வாழ்த்துதும் வாழ்க
நன்றே புரிந்து நானிலத்துள்ளே.

மகாவித்துவான் ச. **தண்டபாணி தேசிகர்,**
மதுரைப் பல்கலைக் கழகம், மதுரை.

தில்லைக்கூத்தன் திருவருளால் பதினறு ஆண்டுகட்கு முன்பு நூலகமாகத் தோன்றியது. வெற்றித் துணைவனைக் கொண்டு பலதுறைகளில் பல நூல்களை வெளியிட்டுப் பதிப்பகமாகவும் பணியாற்றத் தொடங்கியது. இப்போது அதற்கு நல்ல காளைப்பருவம். பணி நோக்கத்திலும் பல நூல்களை அச்சிட்டு உதவிவருகிறது. முதிய எழுத்தாளர்களுக்கு ஓர் அறநிலையம். இளைய எழுத்தாளர்களுக்கு ஒரு கொழு கொம்பு. இன்று சென்னை முதலிய இடங்களிலும் கிளை நிலையங்கள் கிளைத்துள்ளன. தில்லையில் உள்ள வேரினைத் தண்ணூர் தமிழளிக்கும் தில்லைக்கூத்தன் திருவருள் பெருக்கிக் கொண்டேயிருக்கிறது. அதனுல் மேலும் பலதுறைகளில் பல்கிப் பயன் அளிக்கும் என்ற எதிர்நோக்கும் உறுதியும் எனக்கிருக்கிறது.

இத்தனைக்கும் காரணம் பேருழவன் மெய்யப்பன் அவர்களுடைய இடைவிடாத பெருமுயற்சிதான். ஊக்கம் இருந்தால் ஆக்கமுண்டு என்பார்களே உண்மைதான்.

## மு. இராமசாமி, தமிழாசிரியர், இராசிபுரம்.

தமிழகத்தில் நூல்களைப் பதிப்பிக்கும் பதிப்பகங்கள் எத்தனை எத்தனையோ உள்ளன. அவைகளுள், சிலவே வியாபார நோக்கின்றி, மொழி வளர்ச்சியையே நோக்கமாகக் கொண்டு தொண்டு செய்வன. மணிவாசகர் நூலகமும் அச் சிலவற்றுள் ஒன்று.

நல்ல உயர்ந்த தரமான அறிவுக்கு விருந்தான நூல்களை வெளியிட்டுத் தமிழகத்திற்குச் சிறந்ததொரு தொண்டினைச் செய்து கொண்டிருப்பது மணிவாசகர் நூலகம். உரையாசிரியர் சிந்தனைக் களங்கள், தமிழில் சமயம் முதலிய அறிவுச் செல்வங்களை வெளியிட்டுப் பெருமை பெற்று நிற்பது இந்நூலகம்.

இத்தகைய புதுமையான தமிழ் மணங் கமழும் நூல்களை மேலும் மேலும் வெளியிட்டுத் தமிழ்த் தொண்டாற்ற இருக்கும் மணிவாசகர் நூலகம், தமிழகத்திலேயே தனித்ததோர் சிறப்பிடத்தைப் பெற்றுத் திகழ வேண்டும் என உளநிறை வோடு வாழ்த்துகின்றேன். வளர்க.

## டாக்டர் ம. ரா. போ. குருசாமி, கோவை.

வாணிபம் எல்லாமே ஊதியம் கருதுவதே. அதில் தவறு அறக்கேடோ இல்லை. எனினும் பொருளீட்டம் மட்டுமே கருது வோர் நூல்வெளியீட்டுத் துறைக்கு வாரார். மணிவாசகர் நூலகம் நல்ல நூல்களை வெளியிடுகின்றது. இது மன மகிழ்ச்சிக்கும் பெருமிதத்துக்கும் உரியது.

'உரையாசிரியர்கள்' போன்ற மணியான நூல்களை வெளியிட்ட பெருமைக்குரிய இந்த நிலையத்துக்கு அம்பல வாணரின் திருவருள் துணைநின்றிடுக.

## டாக்டர் சொ. சிங்காரவேலன், மாயூரம்.

மணிவாசகர் நூலகத்தார் தம் புத்தக வெளியீட்டுப் பணியின் பதினைந்தாவது ஆண்டு நிறைவை எய்துகின்றனர் என்பது பெருமகிழ்விற்குரியது. இவ்வளவு குறுகிய காலத்தில் அரிய, இனிய, எளிய ஆய்வு நூல்களை வெளியிட்டிருக் கின்றனரே என்று வியக்கத் தோன்றுகிறது. தரமான இலக்கிய நூல்களை வெளிப்படுத்த இதுபோன்ற பல புதிய வெளியீட்டகங்கள் நம் தாய்த் திருநாட்டில் மேலும் மேலும் தோன்றிக் கொண்டேயிருத்தல் வேண்டும். அப்போதுதான் தக்க நூல்களை வாங்கும் பழக்கம் நம் தமிழ் மாந்தர்க்குப் பெரிதும் உண்டாகும். வாழ்க மணிவாசகர் நூலகத்தார். வளர்க இவர்தம் மாபெரும் பணி.

டாக்டர் **கு. திருமேனி,** எம். ஏ., பி. ஓ. எல்., பி. எச். டி.,
முதுகலைப் பேராசிரியர், தமிழ்த்துறைத் தலைவர்.
தேசீயக் கல்லூரி, திருச்சிராப்பள்ளி.

மணிவாசகர் நூலகம் தமிழ் நூல்களை வெளியிடும் நிறுவனங்களில் தக்க இடம் பெற்ற ஒன்று. அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் பணியாற்றும் தமிழ் அறிஞர் பெருமக்கள் பலரைத் துணையாகக் கொண்டு அருமையான ஆராய்ச்சி நூல்கள் பலவற்றை இந்நூலகத்தார் வெளியிட்டுள்ளனர்.

இலக்கியம், இலக்கணம், ஆராய்ச்சி, திறனுய்வுக் கட்டுரை போன்ற பலதிறப்பட்ட இலக்கியக் கூறுகளைத் தமிழ் தழைக்க வெளியிட்டுள்ளனர். இவர்கள் முயற்சி மேன்மேலும் வளர்ந்து தொடர்ந்து நல்ல தமிழ்த் தொண்டாற்ற வேண்டி வாழ்த்துகின்றேன். பதினறு ஆண்டுகள் நிறைவுற்ற இந் நூலகம் என்றும் பதினருக இலங்கட்டும்.

## கு. அழகிரிசாமி, சென்னை.

### சிற்றிலக்கிய ஆய்வு நூல்களின் சிறப்பு

தமிழில் இடைக்காலத்திலும் பிற்காலத்திலும் சிறு பிரபந்தங்கள் பெருகின. அவற்றைப் பற்றிச் சிறந்த விளக்கங்களோடு கூடிய விரிவான நூல்களை முதன் முதலில் வெளிக்கொண்டுவந்த மணிவாசகர் நூலகம் பாராட்டத் தக்கது. எத்துணை முயற்சி, எவ்வளவு உழைப்பு, பிரபந்தங்கள் பற்றிச் சேகரித்த குறிப்புக்கள், விபரங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையில் தமிழ் இலக்கியச் சிறப்பை உணர்த்துவதாகும். பல்வேறு தலைப்புக்களாகப் பகுத்துக்கொண்டு செய்திகளை வகைப்படுத்தியுள்ள முறை சிறப்பாகவுள்ளது. பரணி, உலா முதலிய சிறு பிரபந்தங்களில் உள்ள பெருங் காப்பியப் பண்புகளை இவ்வரிசை நூல்கள் நன்கு வெளிக் கொணர்ந்துள்ளன. மறைந்து போன நூல்களைப் பற்றிய செய்திகளும், அச்சேற்றப் பெருத கையெழுத்துப் பிரதிகளின் அரிய குறிப்புக்களும் ஆய்வாளர்களுக்கு அருந்துணையாவன.

பிரபந்தங்களின் கருத்து வளமும் கற்பனை நலமும் சொல்லாட்சிச் சிறப்பும் ஆங்காங்கே சுட்டப்பட்டுள்ளன. பிரபந்தச் செய்யுட்களின் நுட்பங்கள் எளிமையாக விளக்கப் பட்டுள்ளன. அவற்றில் விரவிக் கிடக்கும் வரலாற்றுக் குறிப்புக்கள் தொகுக்கப் பெற்றுள்ளன. ஒவ்வொரு நூலின் இறுதியில் அமைந்துள்ள பிற்சேர்க்கையின் அட்டவணைகள் பட்டியல்கள் இலக்கிய வரலாற்று ஆய்வுக்குச் சிறந்த துணையாவன.

வரன்முறையாகத் தமிழ் பயில்வார் முன்பு பயின்ற பிரபந்தங்கள், இடையில் பயில்வாரில்லாது போயின. இவற்றைப் புதிய வனப்புடன் பதிப்பித்து வரும் ச. மெய்யப்பன் அவர்களின் தமிழ் உணர்வும், எதிர்கால நோக்கும் போற்றுதற் குரியன. இவ்வகையில் அந்தாதி, கலம்பகம், பிள்ளைத்தமிழ் ஆகியனவும் வெளிவர வேண்டும் என்பது என் விருப்பம்.

**டாக்டர் ந. சஞ்சீவி,**
பேராசிரியர், சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை.

பல ஆண்டுகள் வாழ்வுடைய பெரிய நிறுவனங்களும் செய்தற்கு அரிய நூல் வெளியீட்டுப் பணிகளைச் சில ஆண்டு களிலேயே மணிவாசகர் நூலகம் மாண்புற ஆற்றியுள்ளது—திருவருள் துணையால். தரமான நூல்களை வெளியிடும் நாணயமான நிறுவனங்களாலேயே நாடு உயரும். அறிவுப் பெருக்கமே அஞ்சாமைச் சுருக்கத்திற்கு அடிப்படையாகும். அஞ்சாமை சுருங்கினாலேயே ஊழல்கள் ஒழியும். ஊழல்கள் ஒழிந்தாலேயே உயர்வு ஓங்கும்.

தமிழும், சைவமும், கல்வியும், கடமையும், செழித்தோங்க மணிவாசகர் நூலகத்தின் மதிப்பு மிக்க பணிகள் தொடர்க. திருவருள் துணை புரிக.

பேராசிரியர் **அ. மு. பரமசிவானந்தம்,** சென்னை.

மணிவாசகர் நூலகம் பதினைந்து ஆண்டுகள் பணியாற்றி யமை அறிந்து மகிழ்கின்றேன். தொண்டே குறிக்கோளாகக் கடந்த பதினைந்து ஆண்டுகளில் பலவகையில் தமிழ் மக்களுக்கு மணிவாசகர் நூலகம் ஆற்றிய பணியினைத் தமிழர் அனைவரும் நன்றி உணர்வோடு போற்றக் கடமைப்பட்டவராவர். அதன் தொண்டு மேலும் மேலும் சிறக்கவும் அதன் வழியே தமிழும் தமிழரும் தமிழ்நாடும் பயன்பெறவும் இறைவன் நல்லருள் புரிவானாக.

**அரு. இலக்குவன்,** எம். ஏ., எம். ஏ.,
முதல்வர், பூம்புகார்ப் பேரவைக் கல்லூரி, பூம்புகார்.

எழுத்துலகின் அமரத்துவம் பதிப்பகங்களின் கையில் உள்ளது. எழுத்தாளர்களின் கனவுகள் கற்பனைகள் வெறுங்காகி தங்கள் அளவில் நில்லாமல் நூற்பிறப்பெடுக்கப் பதிப்பகங்களே பிரமதேவனின் கலை இல்லங்களாகத் திகழ்கின்றன. 'பொய்யாய்ப் பழங்கதையாய்ப் போகாமல்' என்றுமுள தென் தமிழ் நூல்களைப் பதிப்பித்து இசை கொள்ளுகின்ற சிறப்பு மணிவாசகர் நூலகத்துக்குண்டு. பதினைந்தாண்டுகள் பதிப்புச் சேவை செய்து தனக்குவமை இல்லாத செம்பதிப்புகளை வெளியிடும் மணிவாசகர் நூலகத்தின் பதிப்புத் தொண்டு, யுகம் யுகமாக வளர வாழ்த்துகிறேன்.

இந்நூலகத்தின் உறுதுணையாளர் திரு. ச. மெய்யப்பன் எம். ஏ. அவர்கள் திறமான புலமையுடைய எழுத்தாளர்களின் புலமைகள் அச்சேற உதவுகின்றனர்; தமிழ் முழுதறிந்தவர். கவிதைகள், புதினங்கள், சிறுகதைகள், சமயங்கள், இலக்கணங்கள், திறனாய்வுகள் என்றுங்குப் பல துறைகளிலும் எண்ணற்ற நூல்களைப் பதிப்பித்துப் புகழ்க்குடையின் நிழலில் இருப்பவர். இவரது மணிவாசகர் நூலகம் பதிப்புலகின் நீடு துயில் நீக்கப்பாடிவரும் நிலவாகும். இந்நூலகத்தின் பதிப்புச் சேவை நல்ல புண்ணியவாளர்தம் புகழினைப்போல மேலும் மேலும் வளர இறையருளை வேண்டுகிறேன்.

### நா. பார்த்தசாரதி, தீபம், சென்னை.

மணிவாசகர் நூலகத்திற்குப் பதினைந்து ஆண்டுகள் நிறைவது அறிந்து பெருமகிழ்ச்சி அடைகிறேன். இதுவரை செய்த தமிழ்ப்பணிகளுக்காகப் பெருமைப் படவும் இனிச் செய்து முடிக்க வேண்டிய பணிகளில் நம்பிக்கையோடு முனையவும் வேண்டிய வலிமை பெற வாழ்த்துகிறேன். மணிவாசகர் நூலகத்திற்கு என்னுடைய பாராட்டுக்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

### கோவி. மணிசேகரன், சென்னை.

மணிவாசகர் என்றாலே மணியான வாசகத்தை வெளியிடுபவர்கள்; மணி மணியான வாசகர்களைப் பெற்றவர்கள் என்றுதானே பொருள்? தமிழில் தேனைய்ப் பாடிய மணிவாசகப் பெருமான் திருப்பெயரைக் கொண்ட இந்த நூலகம், பல சிறந்த இலக்கிய சேவைகளைச் செய்திருக்கிறது என்பதை நான் நன்கு அறிவேன். பல நூல்கள், பல பரிசுகளைப் பெற்றிருக்கின்றன என்பதே இதற்குச் சான்று.

அருமை நண்பர் பேராசிரியர் மெய்யப்பன் அவர்கள், சிறந்த இலக்கிய ஞானம் பெற்றவர்கள்; இலக்கியப் பண்பாளர். அவரது நோக்கமே இலக்கியம் தழைக்க வேண்டும் என்பது. மணி (Money) வாசகராக அவர் மருவ விரும்பாது, மணி வாசகமாகத் திகழத் தமது நூலகத்தை வளர்த்து வருகிறார்.

பதினாறு ஆண்டுகளாக இந்த இலக்கியப் பணி புரிந்து வரும் இந்நூலகம், பதினாறு பேறுகளைப் பெற்றுத் திகழ இறைவனை வணங்கி வாழ்த்துகிறேன்.

**கவிஞர் மு. அண்ணாமலை**, எம். ஏ., எம். லிட்.,
சிதம்பரம்.

மணிவாசகர் நூலகத்தின் தமிழ்ப்பணி மிகமிகச் செவ்விய முறையில் வளர்ந்தோங்கி வருகிறது. புத்தக வெளியீட்டால் தமிழ் மக்கள் அடைய வேண்டிய பயனை அடைவதற்கு உரிய திருவாயில் மாடமே மணிவாசகர் நூலகம். அதனைத் திறந்து அறிவுத் திருவாசலுக்குத் தோரண மாடம் அமைத்தவர் நண்பரும் என் அன்புக்கு உரிய மாணவரும் ஆகிய திரு. ச. மெய்யப்பன் ஆவார். அவரே இந்த நூலகத்திற்குக் கிடைத்த பெரிய மூலதனம்.

அவரும் அவரது திறமையும்

பொருள் மட்டும் மூலதனம் ஆகிவிட முடியாது அதனைப் பின்னின்று இயக்கும் மனித சக்தியும் ஈடு இணையற்ற முதலீட்டு சாதனமாகும். அந்தப் போக்கில் பார்த்தால் மூல த்னத்தின் இரு சிறகுகளும் மணிவாசகர் நூலகத்திற்குக் கிடைத்திருக்கிறது. அதன் வளர்ச்சியில் ஐயப்படுதற்கு உரிய மூலக் கூறுகள் எதுவும் இல்லை. மணிவாசகர் நூலகம் சிறந்த குறிக்கோளை நோக்கியும், சாதனைகளை நோக்கியும் முன்னேறுமாக என வாழ்த்துகிறேன்.

**டாக்டர் ச. அகஸ்தியலிங்கம்,**
தலைவர், மொழியியல்துறை,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலைநகர்.

கடந்த பதினாறு ஆண்டுகாலமாக மணிவாசகர் நூலகத்தார் சிறந்த பல பணிகளை ஆற்றி வருவதை நான் நன்கறிவேன். தரமான நூல்களைச் சிறந்த ஆசிரியர்களைக் கொண்டு வெளியிடுவதும் இந் நிலையில் ஆசிரியர் பலருக்கு நல்லதொரு ஊக்கத்தினை அளித்து வருவதும் சிறந்த பணிகளாகும். இந் நிலையில் 75க்கும் அதிகமான சிறந்த நூல்களை வெளியிட்ட மணிவாசக நூலகத்தாரை என்னால் பாராட்டாமல் இருக்க முடியவில்லை. இதன் உறுதுணையாளர் திரு. ச. மெய்யப்பன் அவர்கள் என்னுடன் பயின்றவர். அவருடைய சுறுசுறுப்பான போக்கையும் எழுச்சிமிக்க எண்ணங்களையும் துடிப்பான போக்கையும் அப்போதே நான் நன்கு அறிவேன். நல்ல தொரு எதிர்காலத்தைக் கொண்டு நிற்கும் இந்நூலகம் மேலும் வளர்ந்து தமிழ்ப் பணி செய்ய என் வாழ்த்துக்கள்.

## ஏ. வி. சுப்பிரமணிய அய்யர்.

(ஆசிரியர்: தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி) திருநெல்வேலி.

மிக அருமையாக எழுதப் பெற்ற உரையாசிரியர் என்னும் நூலில் ஆசிரியர் பல விஷயங்களையும் ஒன்றுவிடாமல் கொடுக்க வேண்டும் என்ற புலமை அவா வெளிப்படுகின்றது. இந்த நூல் ஒரு பிரமாதமான முயற்சி. எனக்குச் சில கருத்து வேறுபாடுகள் இருப்பினும், நூலை நான் முழு மனதுடன் பாராட்டுகிறேன். இது போன்ற நூல்கள், தமிழ் ஆராய்ச்சி யின் வளர்ச்சிக்கு அவசியமான உபகரணங்கள். ஆர்வமும் முயற்சியும் உள்ள திரு. ச. மெய்யப்பன், அறிஞர்களை நாடி அவர்தம் சிறந்த நூல்களைத் தேடி வெளியிடுபவர். அறிஞர் க. சந்தானம் அவர்களின் காந்திய நெறி குறிப்பிடத் தக்கது. யாரும் வெளியிட அஞ்சிய என் சித்தர்கள் தத்துவம் என்ற நூலைச் சிறப்பாக வெளியிட்டதுடன் என் நூல்கள் விற்பனை ஆவதற்குப் பெரிதும் துணை நிற்பவர். பல நூல்கள் வெளி யிடுவதனைவிடச் சிறந்த சில நூல்கள் வெளியிடுவதே அவர் குறிக்கோள். தமிழ்ப் புத்தக உலகிற்கு மெய்யப்பன் மேன்மை சேர்ப்பவர் என்பது என் உறுதியான கருத்து.

## சோமலெ

சாஸ்திரி நகர், சென்னை.

பல்கலைக் கழக நகரமாக ஏறத்தாழ ஐம்பது ஆண்டு களாகவும் தேவாரச் சுவடிகள் கண்டெடுக்கப்பட்ட பகுதி யாகப் பல நூற்றுண்டுகளுக்கு முன்னரும், தமிழ் மொழி வரலாற்றில் இடம் பெற்றிருக்கும் தலம் சிதம்பரம். தொன் மைப் புகழுடைய இங்குத் தரமான தமிழ் நூல்களை வெளி யிடும் பதிப்பகம் இல்லாத குறையை 15 ஆண்டுகளுக்கு முன் ஏற்பட்ட மணிவாசகர் நூலகம் நிறையாக்கியிருக்கிறது. இப்பதிப்பகத்தாரின் வெளியீடுகள் பல்வேறு துறைகளில் சிறு நூல்கள் முதல், அளவிலும் பொருளிலும் பெரிய நூல்கள் வரை வெளிவந்துள்ளன. எழுதும் தகுதி இருந்தும் எழுதாது இருந்த பலர்பால், எழுதவேண்டும் என்ற ஆர்வத்தை ஊட்டிய பெருமை இவர்களுக்கு உரியது. ஏற்கனவே பல இதழ்களிலும் சிறப்பு மலர்களிலும் அங்கு மிங்குமாக எழுதிய வர்களும் உள்ளனர். அவர்களுடைய சிதறிய முத்துக்களை ஒரு மாலையாகக் கோத்து ஆராய்ச்சியாளர்களுக்கும் பயன் படும் வண்ணம் உருவாக்கிக் கொடுத்த சிறப்பும் மணி வாசகர் நூலகத்தைச் சாரும். சென்னை போன்ற பெருநகர் களில் இயங்கும் பதிப்பகங்கள் மட்டுமே தமிழ்நூல் வெளி யீட்டு உலகின் இன்றைய தேவைகள் அனைத்துக்கும் பணிபுரிந்துவிட இயலாது அச்சுத்தாள் முதலியன கிடைப்ப திலும் நூல் வெளியீட்டுக்கும் விற்பனைக்கும் பல சிக்கல்கள் உள்ள சூழ்நிலையில் மணிவாசகர் நூலகம் மேற்கொண்ட இடையரு முயற்சியும் செய்திருக்கும் பணியும் இனிச் செய்ய இருக்கும் பணிகளுக்காகத் தீட்டியிருக்கும் சீரிய திட்டங் களும் பாராட்டுக்கு உரியன. அவர்கட்கு என் வாழ்த்து.

புலவர் ஏறு. **ந. ரா. முருகவேள்,**
ஆசிரியர், திருக்கோயில்.

எல்லாம்வல்ல நம் சிவகாமசுந்தரியம்மை உடனுறை தில்லை நடராசப்பெருமான் திருவருளால், மணிவாசகர் நூலகம் தொடங்கிப் பதினைந்து ஆண்டுகள் ஆதல் அறிந்து மிகவும் மகிழ்கின்றேன். நல்ல தரமுடையனவாகவும், பல்வேறு வகைப்பட்டனவும் ஆகிய சிறந்த பல இலக்கிய நூல்களைப் பதிப்பித்து வெளியிட்டு, மணிவாசகர் நூலகம் சிறந்த முறையில் தமிழ்த் தொண்டாற்றி வருகின்றது. இந்நூலகம், மேன்மேலும் வளர்ந்தோங்க இறைவன் திருவருளை வழுத்துகிறேன்.

மற்றிணையில் சீர்த்திமணி வாசகர் நூலகம்தான்
பொற்புமிகும் நல்ல புத்தகங்கள் — பற்பலவும்
மேன்மேல் வெளியிட்டு மிக்கபெரு வெற்றியுடன்
சால்போங்கி வாழ்க தழைத்து.

**சிற்பி பாலசுப்பிரமணியம்,** எம். ஏ.
துணைத்தமிழ்ப் பேராசிரியர்
நல்லமுத்துக் கவுண்டர் மகாலிங்கம் கல்லூரி, பொள்ளாச்சி

புத்தக வெளியீட்டுத் துறையில் ஒரு புதிய தாரகை உதயமாயிற்று, பதினைந்தாண்டுகட்கு முன்பு. அதன் வெற்றிப் பயணம் விழாக் கோலம் பூணுகின்றது இன்று.

நண்பரும் நல்ல உழைப்பாளியுமான திரு. மெய்யப்பன் கண்ட இளமைக் கனவுகள், மணிவாசகர் நூலகமாக உருக் கொண்டன. கப்பும் கிளையுமாக அடர்ந்து செழித்துப் படைப் பாளிகளுக்கும் ஆராய்ச்சியாளர்களுக்கும், வாசகர்களுக்கும் ஒரு கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும் வகை கிடைத்த குளிர் தருவாய் இந்நிலையம் வளர்ந் தோங்கியுள்ளது.

எனது நூல்களைத் தமிழகத்துக்கு அறிமுகம் செய்து என் கவி மழலைகளுக்குப் பிரசவக் கூடமாயிற்று, மணிவாசகர் நூலகம். இது போன்ற பெரு நல்லுதவிகளைப் பல இளம் எழுத்தாளர்களுக்கும் வழங்கியது இப்பதிப்பகம்.

மணிவாசகர் என்றால் பதிப்புத்துறையில் ஒரு தனி முத்திரை. மதிப்பும் தரமும் மிக்க நூல்களே அதன் அடையாளம். பல நல்ல நூல்கள் தமிழ்நாடு அரசு மத்திய அரசு பரிசுகள் பெற்றுப் பெருமை கொண்டது இதற்குச் சான்று. இலக்கியப்படைப்பு இலக்கிய ஆராய்ச்சி இலக்கிய நுட்பம் என்று ஆழ்ந்தும் அகன்றும் சுவையாகச் சிந்தித்தும் நூலாசிரி யர்களை நண்பர் மெய்யப்பன் எழுதத் தூண்டுவதைக் காணலாம். மற்ற வெளியீட்டகங்களிலிருந்து இந்நூலகம் மாறுபட்டிருப்பதற்கு இது ஒரு காரணம். நல்ல ஆலோசனை கள் எப்போதும் இந்நூலகத்தில் வரவேற்பும் பெற்றதுண்டு.

சிற்றிலக்கியங்கள் பற்றி விதம் விதமாக வெளிவந்துள்ள நூல்கள், உரையாசிரியர்கள் குறித்து எழுதப்பட்ட ஒரு தனிப்பெரும் ஆய்வு, உணவு, மருத்துவம் போன்ற துறை களைப் பற்றியும் புத்தகங்கள் நமது சிந்தனைகளைச் செழுமை யும் கூர்மையும் கொள்ளச் செய்தன.

பிற பதிப்பகங்களைப் போல் கவிதை என்றதும் முகம் சுளிக்காது பல அருமையான கவிதைத் தொகுதிகளை வெளியிட்டு மணிவாசகர் நூலகம் அருந்தொண்டு ஆற்றி யுள்ளது

நூல்களை வெளியிடுவது மட்டும் போதாது. அவை எழிலும் அழகும் பொலிய வெளிவந்தால்தான் காலத்துக்கு ஏற்ற கவர்ச்சி பெறும். இந்தவகையிலும் மணிவாசகர் நூலகம் முன்னோடியாக வழிகாட்டுகிறது.

எவ்வளவோ காலமாகப் பணியாற்றி வரும் பதிப்பகங் கள் தமிழகத்தில் உண்டு. அவற்றில் பல, பழமையில் புதை யும்; சில புதுமையில் நெளியும்; சில கவர்ச்சியில் வளையும்; மற்றும் சில மதச்சிமிழில் முடங்கும்; ஆனால் துறைதுறை தோறும் விளைந்த, விளைகிற, விளையும் நலங்களை யெல்லாம் ஆரமுயன்று சேரத்தொகுத்தளிக்கும் இலக்கியப் பண்ணை மணிவாசகர் நூலகம். அதன் நூல் பட்டியல் இதற்குச் சான்று.

இந்நூலகத்தின் வளர்ச்சி, அறிவின் வளர்ச்சி, செம்மை ஆக்கத்தின் வளர்ச்சி, கலையின் வளர்ச்சி, ஒரு நல்ல முயற்சி யின் வளர்ச்சி.

பதினைந்து ஆண்டுகள் நிறைவு கண்ட நிறுவனம் ஆயிரம் காலால் நடக்கும் அமுத நதியாக வளர்க. வாழ்க.

**பா. வளன் அரசு**
தமிழ்த் துணைப் பேராசிரியர், தூய யோவான் கல்லூரி,
பாளையங்கோட்டை.

தில்லை மணிவாசகர் நூலகத்தார் பல்லாற்றானும் பதினைந்து ஆண்டுகளாக மதிப்பு மிக்க பதிப்புப் பணியில் ஈடுபட்டுள்ளனர்.

“நல்ல நண்பர்களைத் தேடிக்கொள்வதற்கு அடுத்தபடியாக நல்ல நூல்களைத் தேடிக்கொள்ளல் இனிது” என்பர் அறிஞர் கோல்டன். நவில்தொறும் நயம் நல்கும் நற்றமிழ் நூல்களைத் தெரிவுசெய்து, மக்களிடையே, அறிவுக் கதிரை விரித்து வரும் மணிவாசகர் நூலகத்தாரின் இலக்கியப்பணி வியந்து பாராட்டத்தக்கது.

பேராசிரியர் கோ. சுப்பிரமணியனார், முனைவர் வ. சுப. மாணிக்கம், பாவலர் கி. வா. சகந்நாதன், ஆய்வாளர் மு. வை. அரவிந்தன் ஆகியோருடைய விழுமிய எழுத்தோவியங்களை அச்சுப் பொறியில் ஏற்றிப் புத்தம் புதிய செய்தி பலவற்றை நாட்டுக்கு வழங்கியுள்ளனர் மணிவாசகர் நூலகத்தார்.

முனைவர் வ.சுப. மாணிக்கம் அவர்கள் “கம்பர்” நூல்வாயிலாகக் காப்பியப் பார்வையினையும் களங்களையும் நேர்மையினையும் எடுத்தியம்பியுள்ள திறம் தமிழ் கூறும் நல்லுலகுக்கு விருந்தாகும். பேராசிரியர் கோ. சுப்பிரமணியனார் நாவரசரையும் மணிவாசகரையும் அறிமுகப்படுத்தி ஆராய்ந்திடும் பாங்கு பாராட்டத்தக்கது. பாவலர் கி. வா. சகந்நாதன் “வீரர் உலகம்” வாயிலாகப் புறப்பொருள் வெண்பா மாலையினை எண் பொருளவாகச் செலச் சொல்லும் சீர்மை போற்றத் தக்கது. ஆய்வாளர் மு. வை. அரவிந்தனின் “உரையாசிரியர்கள்” தமிழ் மொழியின் தொகுப்புக் கலைக்கு நிலைபேறுடைய சிறப்பு நூலாகும்.

ஒல்லும் வகையெல்லாம் ஒண்டமிழ்த் தாயின் இலக்கியச் செல்வங்களை இந்நாட்டவர் பயன்படுத்தி மகிழும் வகையில் உழைத்துவரும் மணிவாசகர் நூலகத்தார் நாட்டுக்கும் மொழிக் கும் நலம் கூட்டும் நூற்களை வெளியிட்டு வீறுசால் புகழுடன் விளங்கிடத் தனக்குவமை இல்லாதான் தாள் பணிந்து, வாழ்த்தி வழுத்துகிறேன்.

**இரா. முத்துக்குமாரசாமி,** எம்.ஏ., பி.லிப்.
மறைமலையடிகள் நூல்நிலையம், சென்னை.

'சிறுகக் கட்டிப் பெருக வாழும்' சிதம்பரம் மணிவாசகர் நூலகம் தமிழ் நாட்டிலுள்ள சிறந்த புத்தக விற்பனை நிலையங் களுள் ஒன்ருகத் திகழ்கிறது. இந் நூலகத்தின் வெளியீடு கள் எண்ணிக்கையில் பேரளவு இல்லையாயினும் தரத்தில் சிறந்து விளங்குபவை. இவற்றில் சில மைய, மாநில அரசு களின் பரிசுகளைப் பெற்றிருப்பது பாராட்டுக்குரியது.

புத்தக வெளியீட்டுப் பணியைக் காட்டிலும் விற்பனைப் பணியின் வழி தமிழ் அறிவு உலகத்திற்கு இது பெருந் தொண்டாற்றி வருகிறது. இதன் உறுதுணையாளர் அன்பர் திரு மெய்யப்பன் தமிழ் கூறு மாநில மட்டுமல்லாது தமிழ் வழங்கும் திருவனந்தையிலிருந்து திருப்பதி வரை திங்களுக்கொரு முறை சென்று மெத்தவெளிவரும் புத்தம்புது நூல்களைத் தேடிப் பிடித்து வெளியுலகிற்கு அறிமுகப்படுத்திவரும் அறவிலைவாணிகர் ஆவர். தாம் நிரம்ப நூல்களை வெளியிட வேண்டுமென்ற நோக்கத்தைவிடத் தமிழ் நூல்கள் நிரம்ப வெளிவர வேண்டுமென்ற பரந்த எண்ணத்தை உடையவர். வாழ்க அவர், தமிழ் நூல் தொண்டு.

## மு. வை. அரவிந்தன்,

தமிழ்ப் பேராசிரியர், அரசு கலைக்கல்லூரி, கிருட்டிணகிரி.

தமிழ் நூற்பதிப்பகங்களை நினைக்கின்றபோது, சென்னை நகரம்தான் முதலில் நம் நினைவுக்கு வரும். பல பதிப்பகங்கள் பல ஆண்டுகளாய்ச் சென்னையில்தான் உள்ளன. இந்த நினைவை மாற்றி, சிதம்பரத்திலும் ஒரு பதிப்பகம் உண்டு என்று நினைவூட்டியது மணிவாசகர் நூலகம். ஆராய்ச்சி என்பது ஓய்வு பெற்றவர் செய்யவேண்டிய பணி என்று இருந்த நிலையை மாற்றியது மணிவாசகர் நூலகம். ஆராய்ச்சி மாணவர்களையும் நடுத்தர வயதினர்களையும் ஆர்வமுள்ள இளைஞர்களையும் ஆராய்ச்சியில் ஈடுபடுத்தி, சிறந்த திறனாய்வு நூல்களை வெளியிட்டது மணிவாசகர் நூலகம். பதினாறு ஆண்டுகளில் தனக்கு என்று ஒரு வழியை வகுத்துக் கொண்டு, முறையாகவும் செப்பமாகவும் தரமான நூல்களை வெளியிட்டு வருகிறது மணிவாசகர் நூலகம்.

இத்தகைய சிறப்புக்களை உடைய மணிவாசகர் நூலகம் ‘ உரையாசிரியர்கள் ’ நூலின் முதற்பதிப்பை வெளியிட்டுச் சாதனை புரிந்தது. இப்போது இரண்டாம் பதிப்பை வெளியிட்டு, முன்பு பெற்ற சாதனைக்கும் வெற்றிக்கும் மெருகு ஊட்டி ஒளிமயமான எதிர்காலத்தை நோக்கிப் பீடுநடை போடுகிறது.

## இரகுபதி

திருவேங்கடவன் பல்கலைக்கழகம், திருப்பதி.

இருபதாம் நூற்றாண்டில் தமிழகத்தில் தமிழ்நூல்களை வெளியிட்டு வெற்றிபெறல் அரிது. ஆயினும் நல்ல துணிவோடு இலக்கிய நூல்களை வெளியிட்டு வெற்றிக்கொடி நாட்டிவரும் மணிவாசகர் நூலகத்தார்க்கு என் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பேராசிரியர் **பூ. ஆலாலசுந்தரன்** எம். ஏ.,
சென்னை.

தில்லை மணிவாசகர் நூலகத்தின் பதினாருண்டுப் பணிகளை யான் மனமாரப் பாராட்டுகின்றேன். இந்நூலகத்தார் தமிழ் இலக்கியம், இலக்கணம், வரலாறு, கல்வெட்டு, சமயம், அறிவியல் முதலிய இன்னோரன்ன பிற பொருள்கள் பற்றிச் சிறந்த நூல்களை மிக்க அழகிய முகப்புடன் வெளியிட்டுள்ளனர். அவற்றுள் சில நூல்கள் தமிழக அரசின் பரிசும், சில நூல்கள் இந்திய அரசின் பரிசும் பெற்றுள்ளன. இந்நூலகத்தின் உறு துணையாக விளங்குபவர் திரு. ச. மெய்யப்பன் எம். ஏ. அவர்கள். இவரது அருமைத் தந்தையார் திரு. பழ. சண்முகனார் அவர்கள் சிறந்த சைவ சீலர்; சிவப்பணிகளில் ஈடுபட்டவர். ''மகன் அறிவு தந்தை அறிவு'' என்ற பழமொழிக்கு ஏற்ப, திரு. மெய்யப்பன் அவர்களும் தில்லை அம்பலவாணரிடத்து இடையருப் பேரன்புடையவர். இவர் அன்பு, அடக்கம், ஆள்வினையுடைமை, அறிவுடைமை, இனியவை கூறல், இறையன்பு முதலிய பண்புகள் நிரம்பப் பெற்றவர். மணிவாசகர் நூலகத்தின் வளர்ச்சிக்காக அல்லும் பகலும் அயராது உழைத்துவரும் இவரது அஃகா முயற்சி, தில்லை அம்பலவாணர் திருவருளால் வாழ்க! வளர்க!! வெல்க!!!

## மு. சண்முகம் பிள்ளை

தமிழ் விரிவுரையாளர், திருக்குறள் ஆராய்ச்சிப் பகுதி,
சென்னைப் பல்கலைக்கழகம்.

'தேமதுரத் தமிழோசை உலகம் எலாம் பரவும் வகை செய்தல் வேண்டும்' என்றார் மகாகவி பாரதியார். தமிழோசையைப் பரப்புவதற்குக் கருவியாய் அமைவன வற்றுள் நிலைத்து நின்று காலகாலத்துக்கும் துணைவருவன நூல்களே. ஆகவே, நூல் வெளியீடுகள் சிறப்புற அமைவது தமிழ் வளர்ச்சிக்கு அடிப்படையாய் அமையும். இத்தகு சிறப்பமை பணியில் ஈடுபட்டுள்ள தமிழ் நூல் பதிப்பகங்களுள் சிதம்பரத்தில் அமைந்து, நாளும் தன் பணிகளால் சிறப்புற வளர்ந்து வரும் 'மணிவாசகர் நூலகம்' ஒரு தனியிடம் பெற்று விளங்குகிறது. இந்நாளிலே மணிவாசகர் நூலகத்தின் மாண்புறு பணிகளைத் தமிழுலகம் நன்கு அறியும்.

இந்நூலகம் இப்பொழுது குழவிப்பருவம், பாலப்பருவம் நீங்கிக் குமரப் பருவத்தை எய்தியுள்ளது. பதினாறுண்டைப் பருவக்காளை போன்று இந்நூலகமும் இப்பொழுது பதினாறும் ஆண்டில் வீறு நடையிடுகிறது. 'என்றும் இளையாய் அழகியாய்' என்று முருகப் பெருமானைப் போற்றுவது போன்று மணிவாசகர் நூலகமும், ஆண்டு பல ஆயினும், இன்று போல் என்றும் குமரப் பருவ மிடுக்குடன் இயங்கி, நாட்டுக்கு நல்ல பல பணிகள் புரிந்து சிறப்பதாக.

அந்நாளில் ஆறுமுக நாவலர் பெருமான் தமிழ்ப் பயிர் தழைக்கச் செய்த சிதம்பரத்தில், இந்நாளில் தமிழ்ப் பல்கலைக் கழகம் என நாடு போற்றும் அண்ணமலைப் பல்கலைக்கழகம் அணிசெய்து விளங்கும் சிதம்பரத்தில், நூலாக்கப்பணியில்

பதினாறாண்டுகளாக மணிவாசகர் நூலகமும் ஒரு வரலாற்று நிலையமாக வளர்ந்து வருகிறது.

மணிவாசகர் நூலகத்தின்வழி வெளிவரும் தரமான நூல்கள் தமிழறிஞர்களால் பெரிதும் விரும்பி வரவேற்கப் படுகின்றன. சிற்சில வெளியீடுகள் அரசினர் முதலியோரது சிறப்புப் பரிசினையும் பெற்றுள்ளன. தமிழறி புலவர் மெய்யப்பனார் தமிழின் தரமும் உரமும் அறிந்த பெருமகனா ராதலின், தக்க ஆசிரியர்களுக்கு ஊக்கம் தந்து, மிக்க சிறப்புடைய பொருள்களில் நூல்களை ஆக்கி வருகின்றார். தமிழகப் பெரும்புலவர் பலருடைய அரிய நூல்களை வெளி யிட்டுள்ள பெருமையும் இதற்கு உண்டு.

தமிழில் மட்டுமன்றி உலகப் பொதுமொழியான ஆங்கிலத் திலும் சில நல்ல நூல்களை வெளியிட்டுள்ளமையும் போற்றத் தக்கது. இலக்கியம், இலக்கணம், தத்துவம், வரலாறு, அறிவியல் முதலிய பல துறைகளில் பல நூல்களை இந் நூலகம் வெளியிட்டு வந்துள்ளது. இன்னும் இதுபோன்ற பல துறை நூல்களையும் காலத்திற்கு இயையக் கவினுறப் படைத்து மணிவாசகர் நூலகம் என்றும் பதினாறும் இளமை யுடன் வளமை சிறந்து ஓங்கத் தமிழன்னை தண்ணருள் புரிவாளாக.

மணிவா சகர்பெயர் மன்நூ லகத்தில்
அணியணியாய் ஆய்பெருநூல் தந்தே — திணியுலகில்
நாள்நாளும் ஒள்ளொளிரும் ஞாயிறுபோல் என்றுமே
ஆள்வினை ஆற்றுக நன்கு.

## டாக்டர் இரா. நாகசாமி

தொல்லியல் துறை, சென்னை.

தற்காலத்தில் கதைகளையும், பாடப்புத்தகங்களையும் தவிர முழுமையான அறிவு வளர்ச்சிக்காகவே நூல்களைத் தமிழில் வெளியிடுதல் என்பது மிகவும் அரிதான செயல். நூல்கள் விற்பனையாகா. பொருள் முடக்கமும் மனத் தளர்வுமே ஏற்படும். இந்த இக்கட்டான சூழ்நிலையில் தமிழில் அறிவு வளர்ச்சிக்கு உரிய சூழ்நிலை குறுகியே உள்ளது எனலாம். ஆங்கில நூல்கள் அவ்வாறு அல்ல. பதிப்பாகும் நூல்களுக்கு இந்தியநாடு முழுவது மட்டுமின்றி வெளிநாடுகளிலும் வாங்கும் வாய்ப்பு உண்டு. தமிழ் நூல்களோ தமிழ்நாட்டுக் குள்ளாகவே பெரும்பாலும் விற்கப்படல் வேண்டும். இச்சூழ் நிலையில் கடந்த 16 ஆண்டுகளாக, தில்லை மணிவாசகர் நிலையம் தரமான, ஆராய்ச்சிக்கும், அறிவுக்கும் தேவையான பல நூல்களை 'தைரியமாக' வெளியிட்டு வருவதோடன்றி வெற்றியும் கண்டுள்ளது என்றால், அதன் மிகச் சிறந்த பணி என்பதில் ஐயமில்லை. அன்பர் ச. மெய்யப்பன் அவர்கள் செய்யும் தொண்டு ஆக்கத்தொண்டு. அறிவுத் தொண்டு, தன்னலமற்ற தொண்டு. இப்பணி இன்றுபோல் என்றும் சிறக்க உளமார வாழ்த்துகிறேன்.

**டாக்டர் இரா. சாரங்கபாணி**
தமிழ்த்துறைத் தலைவர்
அழகப்பர் கல்லூரி, காரைக்குடி.

மக்களுக்குத் தோன்றும் பசிகளுள் ஒன்று அறிவுப்பசி. அதனைத் தணிக்கத்தக்க நூல்கள் பெரிதும் தோன்றவில்லை வயிற்றுப் பசியைச் சிலர் கிடைத்ததைக்கொண்டு தணித்துக் கொள்வதுபோலச் சிலர் தம்கைக்குக் கிடைத்த நூல்களை அறிவுப்பசியைத் தணிக்கக் கற்கின்றனர். அதனால் வேண்டிய அறிவு கைவரப் பெறுவதில்லை. மாறாகத் தீமையும் விளைகிறது. சில பதிப்பகங்கள் ஊதியம் ஒன்றனையே கருதாது தரமான நூல்களை வெளியீடு செய்து தமிழ்ப் புகழ் வளர்த்துத் தாமும் புகழ் சிறந்து விளங்குகின்றன. அத்தகைய சில பதிப்பகங்களுள் ஒன்று மணிவாசகர் நூலகம்.

இது தமிழகச் சான்றோர்கள், மதிநுட்பம் நூலோடுடையவர்கள் ஆகியோர் தம் நூல்களைப் பதினைந்தாண்டுகளாக மலரச் செய்து அறிவு மணம் பரப்பி நற்றொண்டு புரிந்து வருகிறது. பரிபாடல் திறன் எனும் என் ஆய்வு நூலைச் சில பதிப்பகங்கள் வெளியிடப் பின்வாங்கிய நிலையில் மணிவாசகர் நூலகம் விருப்பமோடு முன்வந்து அதனை வெளியிட்டது. இந்நூல் பின்னர்த் தமிழக அரசின் பரிசைப்பெற்ற போது நூலகத்தின் மதிப்பும் உடன் பெருகிற்று. அந்நூலகம் வீரர் உலகம், உரையாசிரியர்கள் முதலிய தரமான நூல்களை வெளியிட்டது. அவையும் பரிசு பெற்று நூலகத்தின் தொண்டினை உயரச் செய்தன.

மேலும் தெளிவான எழுத்துக்கள், பொலிவான முகப்புக்கள், பிழையின்மை முதலிய பதிப்புக் கலைச் சிறப்புடன் நூல்களைப் பதிப்பிப்பது இப்பதிப்பகத்தின் சிறப்பாகும். கம்பர், கம்பர் விருந்து, சிந்தனைக் களங்கள் முதலிய நவில்தொறும்

நூல்நயம் பயக்கும் நூல்களை ஆண்டுதோறும் இது வெளியீடு செய்துவருகிறது. இதன் உறுதுணையாளர் திரு. ச. மெய்யப்பன் எம். ஏ. தமிழ் விரிவுரையாளரும் தமிழ் எழுத்தாளரும் ஆவர். ஆய்வு நோக்கம் உடையவர். தமிழ் அறிஞர்களை நன்கு மதிப்பவர். அவர் பொறுப்பிலும் கண்காணிப்பிலும் வளர்ந்து வரும் மணிவாசகர் நூலகம் மேலும் உயர்ந்து தமிழ் நூல் களைத் தமிழ்த்தாயின் திருவடிக்குச் சூட்டிச் செழித்துத் தழைத்துப் புகழ் பொலிந்து வளர்க.

### டாக்டர் **சி. பாலசுப்பிரமணியன்,**
தமிழ்ப் பேராசிரியர்,
சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை.

நல்ல தமிழ் வளர்க்கும் நற்றொண்டில் நாளும் தலைப்பட்டு நிற்கும் சிதம்பரம் மணிவாசகர் நூலகம், தன் சீரிய பணியினைத் தொடங்கிப் பதினைந்து ஆண்டுகள் நிறை வுறுகின்றன

பேராசிரியர் கோ. சுப்பிரமணியபிள்ளை, டாக்டர் வ. சுப. மாணிக்கம் முதலான பேராசிரியப் பெருமக்களின் நல்ல தமிழ்ப் படைப்புக்களை வெளியிட்டுப் பரப்புவதோடு. இள ஞாயிறுகளான புலவர் சோம. இளவரசு, திரு. செ வைத்திய லிங்கம், திரு. மு. வை. அரவிந்தன் முதலானோரின் அரிய படைப்புக்களையும் வெளியிடுவது சாலச் சிறப்புடைத்து.

வாகீச கலாநிதி திரு கி. வா. ஜ. வின் வீரர் உலகம் சாகித்திய அகாதமிப் பரிசு பெற்றது. மணிவாசகர் நூலகத்தின் மாண்பினை உயர்த்தியது. தமிழக அரசின் பல பரிசுகளைப் பெற்ற மணிவாசகர் நூலகம் மேலும் வளர்வதாக; தொண்டு சிறப்பதாக.

**என் வாழ்த்துக்கள்.**

## டாக்டர் தா. வே. வீராசாமி

இணைப்பேராசிரியர்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

மணிவாசகர் நூலகம் தொடங்கிப் பதினைந்து ஆண்டுகள் ஆகிய செய்தியை அறிந்து பெருமகிழ்ச்சி அடைகிறேன். தமிழகத்தில் நூல் வெளியீட்டுக்கலை எத்தனையோ துன்பங்களைக் கடந்து தன்னை நிலைநாட்டிக் கொள்ள வேண்டியுள்ளது. அத்தகைய நிலையிலும் சிற்றிலக்கியங்கள் பற்றிப் பல சிறந்த ஏடுகளையும் உரையாசிரியர் பற்றிப் பல உயர்ந்த நூல்களையும் அண்மையில் வெளிவந்த சிறந்த படைப்புக்களையும் வெளியிட்டுத் தமிழிலக்கியத்தின் முன்னை வளம் புது எழுச்சி பெறவும், இக்காலத் தளிர்கள் நற்பொலிவு பெறவும் மணிவாசகர் நூலகம் ஈடிணையற்ற வகையில் நற்பணி ஆற்றி வருகிறது. எப்பணிக்கும் அச்சனைய ஆற்றல் பெற்ற நற்பணியாளர் இயங்க வேண்டும். அத்தகைமை பெற்றோர்க்கு இலக்கணமாக அமைந்தவர் உயர்திரு ச. மெய்யப்பன் அவர்கள். அவருடைய பேணும் தகைமையும் பெருநெறி ஒழுக்கும் மணிவாசகர் நூலகத்திற்கு வற்றாத நீரூற்றாய் உயிரூட்டுகின்றன.

வாழ்க மணிவாசகர் நூலகம்!
வளர்க அதன் பணிகள்!!

## பாலகவி வயிநாகரம் இராமனுதன் செட்டியார்,

தேவகோட்டை.

தில்லைப் பதியிற் சிறந்தபல நூல்வழங்கி
நல்லபணி செய்தெவரும் நாடுநெறி - சொல்லுமெழில்
மன்னும் பெருமைமணி வாசகர் நூலகம்
இன்னுரு சிறக்க வினிது

## பழ. சண்முகம், குங்குலியம்,
குருகுலம் - வடலூர்.

1. பதினாருண் டான பருவம் நல்ல
பதினாறு பேறையும் பண்பாய் - நிதியெனத்
தந்தாய் இதைவளர்த்து ஆண்டருள் சோதியாம்
எந்தையே காக்க இனிது

2. மணிவா சகர்நூ லகம்தான் உயிர்ப்பாய்
அணிசெயும் மெய்யப் பனுக்கு - மணிமணியாம்
வாழ்த்தருள வந்தித்தேன் வார்கழல்கள் அம்பலவ !
சூழ்ந்தருள்க என்றும் தொடர்ந்து

3. மீனாட்சி தாய்க்கருணை மேவுதிரு ஐந்தெழுத்து
கோனாட்சி நூலகத்தைக் கொண்டுய்க்கும்–வானாட்சித்
தேனாட்சிச் சேவடியான் தேசொளிரும் அம்பலவன்
தானாட்சி என்றுமுண்டு சார்ந்து

## உளுந்தூர்ப்பேட்டை சண்முகம்,
சென்னை.

பலநூல் தமிழில் வெளிவர வேண்டும்
சிலரே சிந்தனை, செல்வம் இரண்டும்
ஒருங்கே பெற்றவர் ஊருக்கு ழைப்பவர்
அருமை நண்பர் அத்தகை யாரே
மணிவா சகர்நூ லகமெனத் தொடங்கிப்
பதினைந் தாண்டுகள் புலமைப் பணியினைத்
தொடர்ந்து செய்தனர் தொடர்க தொண்டுகள்
மலர்வெளி யீடும் மகிழ்ச்சி தருவதே
மணம்ப ரப்பிடும் பணியொடு மாணவர்
வெற்றி பெறவும் உதவும் துணைவனாய்
விளங்கும் நூலகம் வளர்க வாழ்கவே.

**கோ. சிவபாதசுந்தரம்,**
திறனாய்வாளர், சென்னை.

தமிழ் இலக்கியம் சம்பந்தமாக எங்குக் கூட்டமோ விழவோ நடந்தாலும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலிருந்து ஒரு அன்பர் அங்கே கலந்து கொள்வதைக் காணலாம். இலக்கிய ஆராய்ச்சியில் மிகவும் ஈடுபாடு கொண்ட இந்த நண்பர், பல்கலைக் கழகத்து விரிவுரையாளராக இருப்பதுடன், நூலாசிரியராகவும் நூல் வெளியீட்டாளராகவும் இருப்பது தான் பலர் இவரை யார் என்று கேட்கத் தோன்றும். இவர் பெயரைச் சொல்லாமலே, இவர்தான் சிதம்பரம் மணிவாசகர் நூலக உறுதுணையாளர் என்றால் போதும், எவரும் இனம் கண்டு கொண்டு பாராட்டத் தொடங்குவார்கள். தமிழ் இலக்கிய நூல் வெளியீட்டுக்கு வாய்த்த மெய்யான அப்பன் திருவாளர் மெய்யப்பன் ஆவர்.

பெரும்பாலான தமிழ்ப் புத்தக வெளியீட்டாளர்கள் நாவல்களையும் சிறுகதைகளையும் மாத்திரம் வெளியிட்டுக் கொண்டிருக்க, நண்பர் மெய்யப்பன் செய்யும் சேவை பல்கலைக் கழக மாணவர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் மற்றும் இலக்கிய ஆராய்ச்சியாளர்களுக்கும் இன்றியமையாத துறை களில் ஈடிணையற்று விளங்குகிறது. கடந்த 15 ஆண்டுகளாக மணிவாசகர் நூலகம் செய்து வரும் இந்த இலக்கிய சேவை போல வேறு எந்தப் பல்கலைக் கழகமோ தனியார் நிறுவனமோ செய்து வரவில்லை யென்று சொல்ல வேண்டும்.

நண்பர் மெய்யப்பனும் மணிவாசகர் நூலகமும் தொடர்ந்து இலக்கிய சேவை செய்து மேலும் மணி மணியான உயர்தர நூல்களை வெளியிட்டுச் சிறப்புடன் வளரத் தில்லையம்பலத்தான் திருவருளைப் பிரார்த்திக்கின்றேன்.

**பெ. கோ. சுந்தரராஜன்,**
சிட்டி, திறனாய்வாளர், சென்னை,

## மணிவாசகர் நூலகத்தின் சிறந்த பணி

சென்ற பதினாறு ஆண்டுகளாகப் பதிப்புத்துறையில் பாராட்டத் தக்க பணியாற்றி வரும் மணிவாசக நூலகம் மேலும் பல பேரிலக்கியங்களைத் தமிழகத்திற்குத் தந்து, வெள்ளி, பொன் விழாக்கள் கொண்டாட வேண்டுமென்று பணிவுடன் வாழ்த்துகிறேன்.

நான் நூலகம், இதழின் ஆசிரியப் பொறுப்பேற்றிருந்த நாட்களில் மணிவாசகர் நூலகத்தின் விளம்பரப் பட்டியலில் கண்ட இலக்கிய வெளியீடுகளைப் பற்றி மகிழ்ச்சியும் வியப்பும் அடைந்திருக்கிறேன். சிறந்த நூல்களை வெளியிட்டுவரும் இந்தப் பதிப்பகத்தின் பணியின் பயனாகத் தமிழன்பர்களுக்குக் கிடைத்திருக்கும் உரையாசிரியர்கள் பிளினி பெரிப்ளூஸ் போன்ற படைப்புகள் இலக்கியத்திற்கும் வரலாற்றுக்கும் பெரும்பயன் தருபவை. இந்த வெளியீட்டகத்தின் உறுதுணை யாளர் திரு. மெய்யப்பன் நல்ல இலக்கிய ரசிகர். இலக்கியக் கூட்டங்களிலும் கருத்தரங்குகளிலும் தவறாது பங்கேற்று அமைதியாகத் தமது கருத்துக்களை வெளியிடுவதோடு இன்முகத்தோடு எல்லோரிடமும் பழகி இலக்கியத் துறையில் எல்லா உதவியும் செய்ய முன் வருகிறார்.

தமிழ் இலக்கிய வளர்ச்சி, ஆராய்ச்சியுடன் வரலாற்றில் மணிவாசகர் நூலகம், மிகச் சிறந்த இடம் பெறும் நிறுவனம்.

பேராசிரியர் ஆர். மாஸ்கரேனசு.
திருச்சிராப்பள்ளி – 2.

நண்பர் மெய்யப்பன் கண்ணுங் கருத்துமாக வழி நடத்த மணிவாசகர் நூலகம் கடந்த பதினறு ஆண்டு களாகத் தொடர்ந்து சிறந்த பணியாற்றி வருகின்றதை அறிந்து மகிழ்கின்றேன். இந்நூலகம் திறமுற வெளியிட்டுள்ள மொழியியல் சிந்தனைகள், வள்ளுவர் தனித்தன்மை, பரிபாடல் திறன், இலக்கிய விளக்கம், உரையாசிரியர்கள் போன்றவை தமிழ் இலக்கண இலக்கியங்களை ஆழ்ந்து கற்பார்க்கு அரிய கருவூலங்கள். இதுகாறும் இந்நூலகம் பதிப்பித்துள்ள நூல்களின் தலைப்புப் பட்டியலைப் பார்த்த அளவானே இது உயர்தர நூல்களையே வெளியிட்டுதவும் உயர்நோக்கம் கொண்டது என்பது நன்கு புலப்படும். அறிவார்ந்த அன்பர் உளங்கொண்டு ஆற்றும் இன்பத் திருத்தொண்டு தழைத்துச் செழிக்க இறைவன் திருவருளைச் சிந்திக்கின்றேன்.

இரா. மோகன்,
தமிழ்த்துறை,
மதுரைப் பல்கலைக்கழகம், மதுரை.

ஒரு சிறந்த தமிழ்ப் புலவரின் பெயரால் அமைந்திருப்பதும், ஒரு நல்ல தமிழறிஞரே உரிமையாளராக வாய்த்திருப்பதும் மணிவாசகர் நூலகத்திற்குக் கிடைத்துள்ள நற்பேறுகள். நூல் வெளியீட்டுத் துறையில் மணிவாசகர் நூலகம் ஆற்றி வரும் தொண்டு, தமிழ் உள்ள வரையில் வாழும் தகைமையதாகும்.

**டாக்டர் ந. வீ. செயராமன்,**
தமிழ்நாடு விவசாயப் பல்கலைக் கழகம், கோயம்புத்தூர்.

தமிழகத்தின் தலைமைச் சிறப்பு வாய்ந்த பதிப்பகங்களில் மணிவாசகர் நூலகம் குறிப்பிடத்தக்க பெருமையுடையது. சென்னை போன்ற பெருநகரங்களில் உள்ள பதிப்பகங்களே பதிப்புத்துறையின் அனைத்து வசதிகளையும் பெற்று வளர முடியும் என நிலவி வந்த கருத்துரையை மாற்றும் வகையில் ஏற்றம் பெற வளர்ந்து நிற்பது மணிவாசகர் நூலகம். ஊக்கமும் உழைப்புத் திறனும் இருந்தால் ஊழையும் பக்கம் காணலாம்; ஆக்கம் அதர்வினவி நாடிவரும் என்பதற்குக் கோபுரம் போல் உயர்ந்து நிற்கும் மணிவாசகர் நூலகம் சான்றாக விளங்குகின்றது.

மணிவாசகர் நூலகம் என்னும் குழவி தத்தித் தவழ்ந்து தளர்நடையிட்டு சப்பாணி கொட்டி வளர்ந்த நிலையில் ஈரெட்டாண்டு அகவையனாக இன்று வாலிப முறுக்கோடு வளம் பெற்றுத் திகழ்கின்றது. பதினாறாண்டு காலப் பணியில் பதிப்பகத்தின் சாதனைகள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவை. நுட்பமும் திட்பமும் வாய்ந்த தமிழாய்வு நூல்களை வனப்போடு அச்சிட்டு வெளியிடவேண்டும் என்ற இலட்சிய வேட்கையினால் தமிழாய்வின் புதுப்புதுத் துறைகளிலெல்லாம் இந்நிறுவனம் தொடர்ந்து நூல்கள் வெளியிட்டு வருகின்றது, சிற்றிலக்கிய அறிமுகவரிசை, உரையாசிரியர்கள், சிறுவர் நூல்கள், திறனாய்வு நூல்கள், வரலாற்று நூல்கள் எனப் பல்வேறு நூல்களைப் பதிப்பித்துத் தமிழ்க் கொடையாக இந்நிறுவனம் தந்துள்ளது. தமிழக அரசு, இந்திய அரசு, சாகித்திய அகாதமி ஆகியன இப்பதிப்பகம் வெளியிட்ட ஆறு நூல்களுக்குப் பரிசுகள் வழங்கியுள்ள பெருமை யொன்றே பதிப்பகத்தின் தரத்துக்கும் தொண்டுக்கும் சான்று பகரும்.

அண்ணல் மெய்யப்பரின் தமிழ்க் கொடை-அருந்தொண்டு.

'மணிவாசகர் நூலகம்' என்னும் குழவியைக் கண்ணின் கருமணியாகக் காத்து, தாயினும் சாலப்பரிந்து ஊட்டி ஊக்கி வளர்த்த பெருந்தகையாளர் அன்புக்கினிய நண்பர் திரு ச. மெய்யப்பன் அவர்கள் ஒல்லும் வாயெல்லாம் அறவினை ஓவாது செய்தல் போல, பதிப்பகத்தின் வாழ்வுக்கும் வளர்ச் சிக்கும் இடையருது பாடுபட்ட செயல்வீரர் அவர். தமிழகத்தில் எந்த மூலை முடுக்குகளிலும் நிகழும் மாநாடுகளும் இலக்கிய விழாக்களும் பதிப்புச் செல்வர் மெய்யப்பனரின் வருகை பெற்றுப் பொலிதல் கண்கூடு. நாளும் நற்றமிழ் வளர்த்த ஞானசம்பந்தர் போலவும், என்கடன் பணி செய்து கிடப்பதே என்றுரைத்த அப்பரைப் போலவும் பதிப்புத்துறையின் வளர்ச் சிக்குப் பாடுபட்டு வருகிருர் அண்ணல் திரு மெய்யப்பன் அவர்கள்.

'பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்க!' என வாழ்த்து வது தமிழ் மரபு. பதினாறு ஆண்டுகாலம் பயனுள்ள பணி யாற்றி மேலும் பல்லாண்டுகள் பதிப்புக்கலைக்குப் பணி செய்யத் தொண்டாற்றி வரும் மணிவாசகர் நூலகமும் அதன் செவிலித் தாயனைய நண்பர் திரு. மெய்யப்பனரும் சிறந்து வாழ்க! வளர்க! பெருகுக! என நிறைந்த இதயத்தோடு வாழ்த்தி மகிழ்கின்றேன்.

## புலவர் சுந்தர சண்முகனார்

புதுச்சேரி.

ஒரு நூலாசிரியன் என்ற முறையில், சிதம்பரம் மணிவாசகர் நூலகத்தை யான் பதினைந்து ஆண்டுகளாக அறிவேன். மணிவாசகர் நூலகம் எனது நூலையும் வெளியிட்டுள்ளது; என் நூல்கள் சிலவற்றையும் விற்பனை செய்துள்ளது. இப்போது அது பதினைந்தாம் ஆண்டு நிறைவு விழாக் கோலம் பூண்டுள்ளது.

தமிழ் வளர்க்கும் பணியில் — தமிழ் பரப்பும் பணியில் மணிவாசகர் நூலகத்திற்குப் பெரும் பங்கு உண்டு. மணிவாசகர் நூலகம், வெற்று அத்தை பாட்டி கதைகளையும், தீய உணர்வுகளைத் தூண்டும் நூல்களையும் வெளியிடும் ஓர் இரங்கத்தக்க நிறுவனம் அன்று. மாறாக, உயர்ந்த உணர்வுகளைத் தூண்டும் நூல்களையும் நல்லறிவு கொளுத்தும் நூல்களையும் சிறந்த மொழி — இலக்கிய ஆராய்ச்சி நூல்களையும் வெளியிடும் உயர்ந்த நிறுவனமாகும் அது.

மக்களுக்கு இன்றியமையாத பல்வேறு துறை நூல்களை உயர்ந்த முறையில் வெளியிட்டுப் பெரும் பணிபுரியும் மணிவாசகர் நூலகத்திற்குத் தமிழகம் பெரிதும் கடமைப் பட்டுள்ளது !

இன்ன பிற உயர்ந்த தகுதிகளையுடைய மணிவாசகர் நூலகம் மேன்மேலும் சிறந்த பணியாற்றி உயர்ந்து வளர்க! வாழ்க !

**புலவர் நாகசண்முகம்**
சென்னை.

## தில்லையில் ஒரு சங்கம்

இலக்கியப் பணி என்பது இலக்கியங்களைப் படைத்தோரைப் பாராட்டுவது, அல்லது அவர்கள் கருத்துக்களை வெளியிடுவது என்ற அளவோடு நின்று விடக்கூடியதல்ல. அவர்களின் உயர் கருத்துக்களை இன்றையத் தலைமுறையினரின் முன்னர் நிலை நிறுத்துவதன் மூலமே அந்தப் பணி முழுமை பெறுகின்றது.

புதுமைப் படைப்புகளும் இலக்கியப் பணிக்கு நல்ல முத்திரைகளே.

இலக்கியப்பணி என்பது வெறும் பொழுது போக்கல்ல. கல்வி வளர்ச்சியில், கருத்து வளர்ச்சியில் அது அடித்தளமாகவே விளங்குகிறது.

இத்தகைய சிந்தனைகள் நம் முன்னே விரிகின்றபோது, நல்ல நூல்களை செம்மையான முறையில் வெளியிடுகின்ற பதிப்பகங்களின் அரும்பணி நம் முன்னே மலர்கின்றது.

அந்நாளில் உயர்ந்த பல நூல்கள் வெளிவரக் காரணமாக இருந்தவை சங்கங்களே.

இந்நாளில் நல்ல நூல்களை கொண்டுவரும் உயர் பதிப்பகங்களும் நற்சங்கங்களே.

கூத்தப்பிரான் கொலுவிருக்கும் தில்லைத் திருநகரில் மணிவாசகப் பெருமான் பெயரால் தோன்றி நாளும் நற்றமிழ் நூல்களை வெளியிட்டுப் பெரும் பணியாற்றி வரும் அன்புச் சகோதரர் மெய்யப்பன் அவர்களின் பதிப்பகமும் ஒரு சங்கமே.

மெய்யப்பர் அச்சங்கத்தின் மெய்க்காவலர். மேலான புலவர். திட்டமிட்டுச் செயல் புரியும் தீரர். நற்றமிழ் வளர்க்கும் நூல்களையே வெளியிடும் நம்பி. நல்லறிஞர்களின் அன்புத் தம்பி.

தரமான நூல்களை வெளியிடுவதுடன் அவற்றைச் சீரான முறையில் விற்பனை செய்வதில்தான் ஒரு பதிப்பகத்தின் வெற்றி அடங்கி இருக்கிறது.

வாணிப முறை நோக்கில் மட்டுமல்லாமல் வெளியிடும் நூல்களை விற்பனை செய்வதன் மூலமே அவற்றை மக்களின் கைகளில் கிடைக்கச் செய்ய முடியும். அந்த முயற்சியிலும் அன்பர் மெய்யப்பர் நல்ல வெற்றி பெற்றிருக்கிறார்.

இல்லையென்றால் தொடர்ந்து அறுபதுக்கு மேற்பட்ட தரமான நூல்களை வெளியிடும் சாதனையைப் புரிந்திருக்க முடியாது.

அந்த நூல்களில் ஆறு நூல்கள் மத்திய மாநில அரசுகளின் பரிசுகளைப் பெற்றுள்ளன. ஆயினும் அவர்கள் வெளியிட்டுள்ள அனைத்து நூல்களும் அறிவுலகத்திற்கும் அன்புத் தமிழ் மக்களுக்கும் நல்ல பரிசுகளே.

பரிசுகளைத் தொடர்ந்து தந்து வரும் அன்புச் சகோதரர் மெய்யப்பரின் பதினாறு ஆண்டு பதிப்பகத்துறைப் பணிகள் தமிழக வரலாற்றில் இடம் பெறத் தக்கவை.

அன்பர் மெய்யப்பர் என்றும் பதினாறாக வாழவும் பதிப்பகத் துறையில் அவர்கள் இன்னும் பல சாதனைகளைப் புரியவும் அருள் புரியுமாறு கூத்தப்பிரானின் மலர்ப்பாதங்களைப் போற்றி வணங்குகிறேன். வாழ்க மெய்யப்பர்.

வளர்க மணிவாசகர் நூலகம்.

**மீ. இராசேந்திரன்**, எம். ஏ.,
தமிழ்ப் பேராசிரியர், மன்னர் கல்லூரி, சிவகங்கை.

மணிவாசகர் நூலகம் பதினாருவது ஆண்டில் அடி எடுத்து வைத்திருப்பதறிந்து மகிழ்கிறேன். ஒவ்வொரு கட்டத்திலும் தலைநகருக்கு வெளியே நிறுவப்பெற்ற பதிப்பகங்கள் மூலம் தான் தலைசிறந்த நூல்கள் வெளிவந்துள்ளன. இந்த உண்மையைத் தங்கள் நூலகமும் உறுதிப்படுத்தியுள்ளது.

சிதம்பரத்தில் பிறந்த மணிவாசகர் நூலகம் சென்னையிலும் புகுந்து சிறந்து விளங்குகிறது. பழந்தமிழ் ஆற்றலைக் கண்டுபிடிக்கும் ஆய்வு நூல்களை மட்டுமின்றிப் புதுத்தமிழ் மேன்மையைப் புலப்படுத்தும் படைப்பிலக்கியங்களையும் வெளிக்கொணர்வது பாராட்டுக்குரியது.

வெள்ளைவாரணனர், வெங்கட்ராமன், இந்த இருவரது எழுத்துக்கள் கபிலர் தாகூர் இந்த இருவரைப் பற்றிய எழுத்துக்கள் மணிவாசக நூலக மாட்சிக்கு அடையாளங்கள்.

வணிக நோக்கம் புத்தக உலகைக் கறையானய் அரித்துக் கொண்டிருக்கும் இந்த நாட்களில் தங்கள் நூலகம் கொஞ்சமும் தயக்கமின்றித் தரமான நூல்களை முன்னின்று தருவதை வரவேற்கிறேன்.

வெற்றிப் பயணத்தை வாழ்த்துகிறேன்.

சிதம்பரத்தில் இரண்டு பல்கலைக் கழகங்கள் இருக்கின்றன. நான் மணிவாசகர் பல்கலைக் கழக மாணவன்.

**டாக்டர் பி. சௌரிராஜன்,**
தமிழ்த்துணைப் பேராசிரியர்,
ஸ்ரீ வெங்கடேஸ்வரா பல்கலைக் கழகம், திருப்பதி.

ஆலம் விதைகள் ஆயிரம் உதிர்கின்றன. அவற்றுள் ஐம்பது அறுபதே மழைபெய்யும்போது முளைக்கின்றன. அவற்றுள்ளும் ஐந்தாறே தொடர்ந்து வாய்ப்பிருந்தால் உயர்ந்தோங்கி வளர்ந்து உலகுக்கு நிழல் தருகின்றன.

கோலக் கருத்துக்கள் இதயத்தில் எண்ணாயிரம் எழுகின்றன. அவற்றுள் எழுபது எண்பதே புறத் தூண்டல் இருப்பின் எழுத்துருப்பெறுகின்றன. துணையோர் மேலும் வாய்ப்பின் நூல் வடிவு ஏற்றுத் திகழ்கின்றன.

இதயம் எழுத்தாகி நூலுருப் பெறத் தூண்டலாய்த் துணையாய் நண்பர் ச. மெய்யப்பன் துலங்குகின்றார். எண்ணங்கள் வாழ, எண்ணுவோரும் வளர்ந்து வாழ அவர் பதிப்புக்கள் துணையாக உள்ளன.

அவர் பதிப்புக்கள் அதாவது மணிவாசகர் நூலகப் பதிப்புக்கள் பல பரிசு பெற்றுள்ளன. அறிஞர் குழுவில் சீரிய வரிசை பெற்றுள்ளன. உரையாசிரியர்கள், சிந்தனைக்களங்கள் முதலியன அவற்றுக்குக் காட்டாக விளங்குகின்றன.

அவர் வாழ, அவர் பதிப்பகம் வளரத் தில்லைக்கூத்தனை வேண்டுவல், அவனன்றோ மார்க்கண்டேயத்தைக் கட்டிக் காத்து, வளர்த்தோன்.

**டாக்டர் சு. சக்திவேல்**, எம். ஏ., எம். ஏ., பிஎச்டி.,
மொழியியல் உயர் ஆய்வுத்துறை,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

தமிழ் நாட்டில் தரமான தமிழ் நூல்களை வெளியிடும் பதிப்பகங்களில் தலைசிறந்து விளங்குவது மணிவாசகர் நூலக மாகும். மணிவாசகத்தார் வெளியிட்டுள்ள நூற்களில் சில மத்திய, மாநில அரசுகளின் பரிசுகளையும் சாகித்திய அகாடமியின் பரிசினையும் பெற்றிருப்பதே இதற்குச் சான்றாகும், நாடு நலம்பெற நல்லறிவுடைய மக்கள் தேவை. மக்கள் மதி துலங்க மாண்புறு நூற்கள் தேவை. அந்நூற்களை வெளியிட நல்ல பதிப்பகங்கள் தேவை. அத்தேவையை நல்ல நூற்களை வெளியிடுவதன் மூலம் மணிவாசகர் நூலகம் நிறைவேற்று கின்றது. பல்துறை அறிஞர்களை நாடி, அவர்களது ஆராய்ச்சிச் செல்வங்களையெல்லாம் நூலாக வெளியிட்டுத் தமிழகத்தில் உலவ விடுவதில் நண்பர் ச. மெய்யப்பன் எம். ஏ. அவர்கட்கு நிகர் யாருமில்லையென்றே துணிவாகக் கூறலாம். மேலும் இவர் தனது டாக்டர் பட்ட ஆய்வுக்கே 'பதிப்புக்கலை' என்னும் பொருள் பற்றி ஆய்ந்து வருகிறார் என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. இவர்தம் பணி மேலும் மேலும் வளர வளரத் தமிழ் மக்களின் ஆதரவும் அன்பும் கிடைக்கும் என நம்புகிறேன்.

## இளங்கம்பன், பழநி.

### வாழி மணிவாசகர் நூலகம்

தேர்ந்த இலக்கியங்கள் தேனுன காவியங்கள்
ஓர்ந்த உயர்ந்த ஒளிநூல்கள் — ஈந்த
அணிசேர் பதிப்பகம் ஆமதுவே தில்லை
மணிவாச கர்நூல கம்

பதினைந்தாண் டாகப்பதிப்புத் துறையில்
அதிகம் உழைத்த அரிய — பதிப்பகம்
பொன்னுன நன்னூற்கள் பொற்புடனே ஈந்துள்ள
கண்ணுன நற்பணியைக் காண்

பாவடிவ நூலென்ருல் பார்க்கலாம் என்ரேதிப்
பாவலர்கள் தம்மைப் பலர்விலக்க — ஆவலுடன்
செய்யதமிழ்ப் பாத்தொகுப்பின் சீரிலங்க வேண்டுமென
மெய்யப்பன் செய்பணியோமேல்

வாங்கிப் படித்து வளங்காணும் வணணமதாய்த்
தேங்கும் சுவைநூற்கள் தேர்ந்தளித்தே — ஓங்கிடுதே
நீங்காத் தமிப்பற்றில் நின்றுழைக்கும் மெய்யப்பன்
பாக்கார் பதிப்புப் பணி

மணிவாச கர்நூல கம்இன்னும் ஓங்கி
அணியான நூற்கள் அளித்து — மணியாக
ஏற்றமுடன் நின்ரெளிர்ந்தே எங்கும் இசைகொள்ள
வேற்குமரன் பால்வேண்டு வேன்.

**ம. வே. பசுபதி,**
செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.

நூருண்டுப் பணியை இந்த
நூலகம் பதினைந் தாண்டில்
ஆருகப் பெருகச் செய்த
அருமையைப் போற்று கின்றேன்
மாருத பணிக ளுக்கு
மறுக்காத வணக்கம் வைத்தேன்
கூருத புகழ்ச்சியெல்லாம்
கூட்டியே துதிக்கின் றேன்நான்

கற்பனைக் கொத்த தெல்லாம்
விற்பனைக் காவ தில்லை
கற்பனை நயமும் மிக்கு
விற்பனை வளமும் சேர்க்கும்
நற்றமிழ் நூல்கள் தேர்ந்து
நல்கிடும் கலையில் வல்ல
அற்புத மெய்யப் பன்தன்
அருமையை வியத்தல் செய்வோம்

நன்னூல்கள் பலவும் தேர்ந்து
நன்கதை வழங்கும் இன்னோர்
என்னூலும் பதிப்பில் பாரா
என்றரும் எழுத்தாளர்கள்
உன்னிடம் புரட்சி செய்யும்
உயர்மணி வாசகப் பேர்
துன்றுநூ லகம்இந் நாட்டில்
துலங்குக கோடி யாண்டு.

## த. கோவேந்தன்,

சென்னை.

### உயர்சீலர் செய்க!

பண்களிக்கப் பாடுகின்ற பாவேந்தர் பாடலைப்போல்
மண்களிக்க மாசிலா நூல்கள் பலப்பலவாய்
மணிவாச கர்நூ லகமளிக்கும் நூலாய்
அணிவாச கன்ஆனேன் ஆதலால், தோழரே
பொய்யப்ப ரேநூல்கள் போக்கிப் புரட்டுகையில்
மெய்யப்ப! மேன்மைக் குதவுகிற மேலோரின்
நூல்களையே நீதந்தாய்; நுண்மாண் நுழைபுல
ஆல்விழு தன்றோ அறிவோங்க யாம் பெற்றோம்;
நூறாண்டு காலம் நுழைந்தும் நுமதுபதி
ஞூறாண்டு கால உருநூல்கள் யார்தந்தார்?
மெய்யப் பனே, மணி வாசக நூலகம்
செய்யப் பனே உயர்வுச் சீலர்.

## டாக்டர் கி. நாச்சிமுத்து,

விரிவுரையாளர், தமிழ்த்துறை,
கேரளப்பல்கலைக்கழகம், கரியவட்டம்.

மணிவாசகர் நூலகத்திற்குப் பதினைந்து ஆண்டுகள் பூர்த்தியான விவரம் அறிந்து மகிழ்ந்தேன். இவ்வளவு குறுகிய காலத்தில் உங்கள் நிறுவனம் தமிழ் இலக்கியத்திற்கு ஆற்றியுள்ள பணிகளை நினைத்துப் பார்த்தபோது மனநிறைவே மிஞ்சியது. குறிப்பாக இலக்கியவகைகளில் வரலாற்று வரிசை, பல்கலைக் கழகங்கள் செய்ய வேண்டிய பணியாகும். அதைத் தொடர்ந்து செய்து வருவதே உங்களைப் பாராட்டப் போதுமானது.

## சி. என். நாச்சியப்பன், காரைக்குடி.

### மணிவாசகர் நூலகத்தின் பதினாறு ஆண்டுப் பணிக்கு வாழ்த்து

பக்குவப் பதினாறு பல்லாண்டு பலநூறு
திக்குகள் தேடிவரும் தித்திக்கும் பருவமிது
வாழ்விலே பதினாறு வசந்தத் தேனூறு
ஆழ்கடல் முத்தாகும் அனுபவம் சொத்தாகும்
நூலகப் பணியின்று நுட்பப் பொருளென்று
தாயகம் உணர்ந்திடத் தரமாகப்ப ணிசெய்து
மணி மணியாய் அணி அணியாய்
துணிவோடு துணைநூலும் தூய இலக்கியமும்
பொருளே நோக்கமின்றிப் புனிதப் பணியாக
அருளும் செயலாக அளிக்கின்ற பதிப்பகத்தார்
சிதம்பரம் என்னுமொரு சேத்திரப் பதியினிலே
இதமாகத் தொழிலோடு இங்கிதம் கற்றவராம்
தூய கட்டுரைகள் தூது இலக்கியங்கள்
ஆய கலைகள் அறுபத்து நான்கினையும்
கலைமகளும் படிக்கும் கவின்மிகு பொருளோடு
விலையும் குறைவாக வெளியிடும் பதிப்பாளர்
மாணிக்க வாசகரின் மாபெரும் பெயராலே
காணிக்கை ஆக்குகின்ற கண்ணியப் பதிப்பாளர்
பரிசில் பலபெற்று பாங்கு மிகப்பெற்று
வரிசை பலபெற்ற வளமிகு நூலகத்தார்
ஈப்போலச் சுறுசுறுப்பு இதயப் பெரும்களிப்பு
பாப்போலப் பலசுவைப்பு பலரிடம் பெருமதிப்பு
கொண்டவரே உரிமையாளர்; கொள்கையிலே புதுமையாளர்
கண்டதில்லை இவரைப்போல்; கவிதைக்கு இலக்காவார்!
என்றும் பதினாறு; எழிலாம் பதினாறு!
நன்றும் பதினாறு; நாளும் பதினாறு!

'' கவிஞர் கோ '' '' பொற்கிழிக் கவிஞர் ''
அரு. **சோமசுந்தரன்**, எம் ஏ., பி. டி.,
நிர்வாகி,
பொன்முடி பதிப்பகம், காரைக்குடி.

சிதம்பரம் என்ற உடனே மணிவாசகர் நினைவு எழுவது இயற்கை. அன்று மணிவாசகத்தைச் சிதம்பரம் நடராசப் பெருமான் ஓலையில் எழுதி வெளியிட்டார். இன்று ஏராளமான மணிவாசகங்களைச் சிதம்பரம் மணிவாசகர் நூலகம் வெளி யிடுகிறது.

கைக்காசு கொடுத்து நூல் வாங்கிப் படிப்போர் தொகை அருகியிருக்கும் இக்காலத்தில் மீண்டும் சிவபெருமான் படிக் காசு கொடுத்துப் பதிப்பகங்களைக் காப்பாற்ற வேண்டும். இன்றேல் நாலுகோடித் தமிழர்களை நானிலமெங்கும் பெற்றிருக்கும் தமிழ்மொழி நலிந்திருக்கும் நிலையில் இருந்து மீளவே முடியாது. புதிய நூல்களை வெளியிட்டுப் பரப்பும் பதிப்பகங்கள் நலிவுற்றிருக்கும் நிலையில் ஒரு மொழி உன்னத மான நிலையை எய்திவிட்டதாக எண்ண முடியாது.

மேல்நாட்டில் நாள்தோறும் புத்தகங்கள் வெளிவரும் இனிய காட்சியைக் கண்டேன். '' வீடுதோறும் புத்தக சாலை வீதிதோறும் புத்தகக் கடைகள் '' என்ற நிலை ; அங்கே இருக்கிறது. ஒவ்வொரு புத்தகக் கடையிலும் '' இன்றைய வருகை '' (Today's arrival) என்ற முறையில் அன்றன்று வந்த புதிய புத்தகங்களைத் தனியிடத்தில் வைத்து அறிமுகப் படுத்துகின்றனர். ஆனல் தமிழ்நாட்டிலோ '' இன்றைய ஸ்பெஷல் ,' உணவு சாலைகளோடு நின்றுவிட்டது. அந்த உணர்ச்சி புத்தக சாலைகளுக்கும் பரவ வேண்டும்.

வள்ளல்கள் இல்லாத நிலையில் பதிப்பகங்கள் பள்ளங்களில் கிடக்கக் காண்கிறோம். ஆயினும் எப்படியோ இது வரை சில பதிப்பகங்கள் தம்மையும் காத்துக் கொண்டு தமிழையும் காத்து வந்திருக்கின்றன. அவற்றில் ஒன்றுதான் ''மணிவாசகர் நூலகம்''. அஃது இன்று ''பதினாறு வயதினிலே'' கடந்தகாலத்துச் சோதனைகளையும், எதிர் காலச் சாதனைகளையும் எண்ணிப் பார்க்கிறது. இதன் உறுதுணையாளர் திரு. ச. மெய்யப்பன் ஆழ்ந்த படிப்பாளியும், அயராத உழைப்பாளியும் ஆவார்.

பதிப்பகத் துறையில் படிப்பும் உழைப்பும் இணைந்து அமைவதில்லை. அதன் விளைவாக நல்ல நூல்கள் வெளி வராமலும், நச்சு நூல்கள் வெளிவந்தும் தமிழுக்கு இடையூறு செய்துள்ளன. ஆனால் மணிவாசகர் நூலகம் நல்ல பதிப் பகத்திற்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டு! அதன் படிப்பு அமைந்த உழைப்புச் சின்னம்!! இரு சக்திகளும் இணைந்த மணிவாசகர் நூலகம் ஒளிமயமான எதிர்காலத்தை விரைவில் காண்பது உறுதி! அதன் பணி சிறக்க வாழ்த்துக்கள்.

**அ. சே. சுந்தரராஜன், பி. ஏ.**

அணிசக்திநகர், பம்பாய்.

மணிவாசகர் நூலகம் பதினைந்து ஆண்டுகளாக அரிய தமிழ் நூல்களைச் சிறந்த முறையில் வெளியிட்டு நல்ல தமிழ்ப் பணி செய்து வருகின்றது. இது போன்ற சீரிய பணி தமிழ் மொழி வளம் பெறுதற்கு இன்றியமையாததொன்று என்பது யாவரும் அறிந்ததே. இந்நூலகம் பல்லாற்றானும் சிறந்து ஓங்கி வளர்வதாக.

## மே. ச. பரதன், சென்னை.

செய்யும் தொழிலே தெய்வமெனப்
போற்றி அயராது ஆர்வமுடன்
உழைத்து, காலத்துக்கும்
நின்று நிலவும் இலக்கியங்களைத்
தமிழுலகத்திற்கு அளிக்கும்
மணிவாசகர் நூலகத்திற்கும்,
பதினைந்தாண்டுகளாய் அதைக்கட்டிக் காத்த
பேராசிரியர் பெருந்தகை
மெய்யப்பன் அவர்களுக்கும்
எனது உளமார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக்
கொள்கிறேன்.

மீண்டும் ஒருமுறை வாழ்த்துகிறேன்.
உழைப்புக்கே இலக்கணமாய்
அமைந்த பேராசிரியர் மெய்யப்பன், எம். ஏ.,
அவர்களுக்கு என் மனமார்ந்த பாராட்டுகள்.

## அன்பு. வேதாசலம்,

தலைவர்
தஞ்சை மாவட்ட எழுத்தாளர் சங்கம், பட்டுக்கோட்டை.

மணிவாசகர் நூலகம் பதினாறு ஆண்டுகளாகச் சிறந்து, பணியாற்றி வருவது கண்டு மகிழ்ந்தேன்.

நசிவு இலக்கியங்களும் - இளம் உள்ளங்களில் பால் உணர்வைத் தூண்டும் நூல்களும் பெருகிவரும் இந்நாளில் தரமான - தமிழகத்தின் கலங்கரை விளக்கமாகத் திகழ்ந்துவரும் மணிவாசகர் நூலகம் வளர்ந்து சிறந்தோங்க அன்புடன் வாழ்த்துவன்.

## அன்புப்பழம் நீ

துணைத்தலைவர் :
ஒய். எம். சி. ஏ. பட்டிமன்றம்,
எஸ்பிளனேடு, சென்னை – 1.

### மணிவாசகர் நூலகம்

மானெனத் துள்ளும் மனத்திற்கெட்டா துரியந்தன்னில் தூக்கிய திருவடியுடன் காட்சி அளிக்கும் தில்லைக்கூத்தன் இருக்குமிடத்திலிருந்து சுமார் 300 அடி தூரத்தில் மணிவாசகர் நூலகம் அமைந்திருக்கிறது. இந்த நூலகத்தைக் கண்டு என் மனவண்டு களிதுள்ளுகிறது.

புன்னகை புரிந்து கொண்டே அன்போடு வரவேற்று நூலகத்தைக் காட்டும் அன்பர் மெய்யப்பன் அவர்களுடன் நெருங்கிப் பழகியிருக்கிறேன். அவர்கள் அரும்பாடுபட்டு இந்த நூலகத்தை வளர்த்திருக்கிறார். இந்த நூலகத்தை வளர்ப்பதற்காக அவர் இதுகாறும் நடந்த நடையைக் கணக்கிட்டுப் பார்த்தேன். அவருடைய கால்களில் சக்கரம் அமைக்கப்பட்டிருக்கிறதோ என்றுகூட எண்ணுவதுண்டு.

பழத்தமிழ் இலக்கியங்களின் சிறப்பையும் நயத்தையும் நன்குணர்ந்த நல்ல மெய்யப்பன் அவர்கள் இலக்கியச் சிறப்புக்கள் நிறைந்த நூல்கள் பலவற்றை வெளியிட்டிருக்கிறார். இலக்கியப் பணியில் ஈடுபட்டு முழுமூச்சுடன் உழைக்கிறார். பசுப்போன்ற அடக்கமும், சிங்கம் போன்ற வீரமும், யானை போன்ற உழைப்புமுடையவர் இவர்.

சிதம்பரம் செல்வோர் அனைவரும் மணிவாசகர் நூலகத்தைப் பார்வையிட வேண்டுமென்பது என் ஆசை. இவர் நூலகத்தில் அறிவுக்கு உணவு கிடைக்கும்.

தமிழ் நூல்களைப் படித்துப் பரந்த அறிவும் ஆழ்ந்த சிந்தையும் பெற்றுத் திகழ வேண்டுமென விரும்புவோ ரனைவரும் மணிவாசகர் நூலகம் வெளியிட்டிருக்கும் நூல்களை வரவேற்று ஆதரிப்பாராக.

மணிவாசகர் நூலகம் வாழ்க - உயர்க.

பேராசிரியர் திருமதி **பு. சிவகாமசுந்தரி,**
எம். ஏ., டிப். எம்.
தமிழ்த்துறைத் தலைவர்,
திரு. அவிநாசிலிங்கம் மனையியற் கல்லூரி,
கோயம்புத்தூர்.

நல்ல தமிழ் நூற்களை நயமான முறையில் வெளியிட்டு நற்பணியாற்றி வரும் சிதம்பரம் மணிவாசகர் நூலகம் தனது பதினைந்து ஆண்டினைக் கடந்து பதினாறும் ஆண்டில் அடி யெடுத்து வைக்கும் சிறப்புக்குச் சொல்மாலை சூட்டுவது மட்டும் போதாது.

நல்ல தமிழ் வளர்க்கும் பெரும் பணியில் நாளும் தலைப்பட்டு அருமையும், பெருமையும், தரமும், ஆழமும், வண்மையும், வளமுமுள்ள நூற்களை வெளியிட்டு நூலோர் நெஞ்சில் உயர்ந்த இடம் பெற்றுள்ள மணிவாசகர் நூலகம் தமிழக அரசின் பல பரிசுகளைச் சென்ற ஆண்டுகளில் பெற் றுள்ளதுபோல, வருகின்ற ஆண்டுகளிலும் பெற்று மேலும் வளர்ந்து, தொண்டு சிறந்து எல்லாம் செயல்கூட வள்ளுவர் கழல்வழுத்தி வாழ்த்துகின்றேன். வாழ்க பல்லாண்டு.

## செந்துறை முத்து, சேலம்.

தில்லை அம்பலவாணர் திருச்சந்நிதியில் தோன்றித் தமிழுக்கு — தமிழுலகிற்கு — தமிழ்ச் சமுதாயத்திற்குத் தொண்டாற்றி வரும் 'மணிவாசகர் நூலகம்', தோன்றிய சில ஆண்டுகளில் நூற்றுக்கு மேற்பட்ட சிறந்த நூல்களை வெளியிட்டுப் பெருமை கொள்கின்றது.

தமிழகத்தில் நூல் வெளியீட்டு நிலையங்கள் பல உள்ளன. ஆயின், தேடிச் சென்று நூல்களை வாங்கத் தக்க சிறப்பு மிக்கவை மிகச் சிலவே. அவற்றில் குறிப்பிடத்தக்க ஒன்று மணிவாசகர் நூலகம். இது, நூல் வெளியீட்டுத் துறையில் சிறந்த சாதனைகள் என்பதினும் புதிய சாதனைகள் புரிந்துள்ளது எனலாம் அறிவுத்துறை போல நல்லறிஞர்களால் புதிய சிந்தனைப் போக்கில் எழுதப் பெற்ற நூல்கள், நூலகத்திற்குப் பெருமை சேர்க்கின்றன.

மணிவாசகர் நூலகத்து வெளியீடுகள் பெற்றுள்ள பரிசுகளும், பாராட்டுகளும் அதன் பெருமையின் சின்னங்களாம்.

மணிவாசகர் நூலகத்து நூல்களையும், அதன் பெருமையினையும் எண்ணுங்கால், அதன் உறுதுணையாக நின்று, அதனைப் பேணி வளர்த்து வருபவராகிய அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழ் விரிவுரையாளர் திரு. ச. மெய்யப்பன் அவர்களை நினைந்து வியந்து பாராட்டாமல் இருக்க வியலாது. நூல் எழுதுபவர்க்கும், வெளியிடும் நூலகத்திற்கும் நல்ல துணையாக நின்று விளங்கும் அப்பண்பாளரை 'வாழ்க' என வாழ்த்துவதோடு, அவர் வழி வளர்ந்து வரும் நூலகமும் மேலும் சிறந்து வளர்ந்து சீரிய பணி புரிந்திட, பொற்சபை வாணன் திருவருள் புரிந்திடுமாறு வாழ்த்தி வணங்கி வேண்டுகின்றேன்.

## கோவை இளஞ்சேரன், நாகப்பட்டினம்.

ஒருநூலைச் செம்மையாக
உருவாக்கி வெளிக்கொ ணர்தல்
ஒருகுழந்தை பெற்றெ டுத்தற்
கொப்பான தென்பேன் தூய
மருவார்ந்த தமிழ்வ யிற்று
மணிவாச கர்நூல் அன்னை
கருவார்ந்த தறுப தேனும்
கன்னியாய்ப் பதினா றுற்றாள்.

கொய்யாத பரிசு வாங்கக்
குழந்தையை முந்த வைப்போன்,
மெய்யான அப்ப னாவான்
மெய்யப்பன் எனும்பேர் அப்பன்
பொய்யாத அப்பன்; நூல்கள்
பொரிக்கின்ற எழுத்தா ளர்க்குக்
கையான அப்பன்; நெல்லிக்
கனியான அப்பன் வாழ்க!

பதினாறாண் டகவை யுற்ற
பருவப்பெண் மணிசொற் காரி
கதிரான மெய்யப் பன்றன்
கவவுக்கை இன்பத் துள்ளே
அதிராத நூலாம் சேய்கள்
ஆயிரம் ஈன்றே, என்றும்
புதிராகப் பதினா றாண்டாய்ப்
பொலிவாகப் புகழில் வாழ்க.

மின்னூர் **சீனிவாசன்,**
மாநிலக் கல்லூரி, சென்னை.

செறிவாம் கருத்தெனும் தூய்மைசேர் பருத்தி
தேர்ந்து நூற்றுயர் கற்பனை நிறுத்தித்
தறியாம் மொழியினில் ஆடைகள் நெய்வீர்,
தமிழ்நா டெங்கணும் புகழ்ந்திடச் செய்வீர்!

தாகூர் நூல்முதல் தனிப்புகழ் நூல்கள்
தந்தீர் அவைமனக் குளத்தினில் சேல்கள்;
பாகூறு நூல்களாய் நாகூறு நூல்கள்
பலவாம் படைப்பவை தகும் ஊன்று கோல்கள்

பேராசிரியர் டாக்டர் **வை. ரத்தினசபாபதி**
தத்துவத்துறை, சென்னைப் பல்கலைக்கழகம்.

நல்லமணி வாசகர் நூலகம் நானிலத்தே
பல்வளமார் வெற்றித் துணைவனாய் — வல்லபெருஞ்
சான்றோர்கள் தமிழுளம்போல் சார்தமிழின் நல்வளம்போல்
ஆன்றோர்கள் போற்றவளர்க.

**டாக்டர் மா. இராமலிங்கம்,**
தமிழ்ப் பேராசிரியர், சென்னை.

தமிழ் நாட்டின் புத்தக உலகத்தை நினைக்கிறபோது உடனடியாக நினைவுக்கு வரும் நான்கைந்து நிறுவனங்களில் சிதம்பரம் மணிவாசகர் நூலகமும் ஒன்று. பதினைந்து ஆண்டு களுக்குமுன் முளைவிட்ட அது, கிளைபரப்பி, வேரூன்றிவிழுது விட்ட பேராலமரமாக இன்று திகழ்வது மகிழ்ச்சி அளிக்கிறது. முதிய தலைமுறையினரின் நூல்களையும், இளைய தலைமுறை யினரின் படைப்புகளையும் ஒருங்கே தந்து, காலத்தின்பாலமாக இருக்கும் அதன் பணி பெரிதும் பாராட்டத் தக்கது.

புத்தகம் வெளியிடுவது ஒரு தொழிலே என்றாலும் தொழிலையும் தொண்டாகக் கருதிப் புனித உணர்வோடு செயல்படுவோர் மிகச் சிலரே. அச் சிலருள் மணிவாசகர் நூலக உறுதுணையாளர் பேராசிரியர் மெய்யப்பன் ஒருவர். தேனீயைப் போல் உழைக்கும் அவரது செயற்றிறன் என்னைப் பல சமயங்களில் வியப்பிலாழ்த்தியதுண்டு. அவருக்குச் செய்யும் தொழிலே தெய்வம்.

புதிய பாரதத்தின் கோயில்கள் நூல் வெளியீட்டகங்களே. அத்தகைய கோயில் ஒன்றைக் கட்டிப் பக்தர்களை நோக்கி சேரவாரும் செகத்தீரே என்று அழைக்கும் மெய்யப்பனார் நம் பாராட்டுக்கு உரியவர்.

வாழ்க மணிவாசகர் நூலகம், வளர்க மெய்யப்பனார் தொண்டு.

பேராசிரியர் **வ. பெருமாள்**, எம். ஏ., பிடி.
கோலார் - மைசூர்.

## தென்னாட்டு மாக்மில்லன்

மணிவாசகர் நூலகம் கடந்த 15 ஆண்டுகளாக மிகச் சிறந்த நூல்களைச் செம்மையான முறையில் வெளியிட்டு வருவது அனைவரும் அறிந்த நற்செய்தி. மணிவாசகர் நூலகத்தின் ஒவ்வொரு வெளியீடும் மணிபோல் விளங்கு கின்றது. மணிவாசகர் நூலக வெளியீடுகள் தமிழகத்துடன் மட்டும் நின்று விடாமல், தமிழ் உலக முழுவதும் பரவித் திகழ்வது பெருமகிழ்ச்சிக்குரியதாகும்.

தமிழ் நூல் பதிப்பகத்துறையில் தென்னாட்டு மாக்மில்லனாகத் திகழும் மணிவாசகர் நூலகம், மேலும் பல அரும் பெரும் நூல்கள் வெளியிட்டுத் தொடர்ந்து அறிவுக்கும் தமிழுக்கும் சீரிய தொண்டாற்றுவதாக.

மணிவாசகர் நூலகம் மேலும் சிறந்தோங்கி வாழ்க, வளர்க, உயர்க, வெல்க.

**மா. கண்ணப்பன்**

அச்சிலே ஒரு அம்பலம். கலைமகளை ஆடல் அரசியாக்கி மணிவாசகர் பாடுகிறார். பதினாறு ஆண்டுக் காலம் கலைமகளின் பாதச் சிலம்பு தமிழகமெங்கும் ஓசை தருகிறது. வெற்றி தொடர்ந்து பெற்று வருகிறது. மெய்விளக்கு மேலோங்க ஆதிரையானை வணங்குகிறேன்.

## அ. அறிவொளி.

தமிழ்த்துணைப் பேராசிரியர்,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

16 வயதினிலே.

ஆமாம். அவளுக்குப் பதினாறு வயதாகிவிட்டது. நல்ல பருவ மங்கை. இயல்பாக அவளுக்குக் கூந்தல் இருந்தது. ஆனால் அதனை அழகாக வளர்த்துப் பேணிச் சீவிவிடக் கற்றுக் கொடுத்தது அவள் அன்னைதான். அவளின் அங்கங்களை இயற்கை அன்னைதான் கொடுத்தாள். என்றாலும் ஆடை அணிகள்தான் அவளின் அங்கங்களுக்கு மேலும் அழகும் நலமும் கொடுத்தன. அதுபோல் இயல்பாக எத்துணையோ பேர்கள் பதிப்பகம் வைக்கும் வாய்ப்புடையராய் இருக்கிறார்கள்; ஆனால் பெற்றெடுத்த அன்னைபோல், ஆடையணிகள்போல் 16 வயது வரை வளர்த்துவிடும் தன்மை முழுவதையும் குறையாமல் செய்துவரும் தலைசிறந்த பதிப்பாளர் திரு. ச. மெய்யப்பன், எம்.ஏ., அவர்கள்ஆவார்கள்.

பணத்துக்காகப் பதிப்பிப்பவர்கள், போட்டிகளில் மேலோங்க இழிந்த சுவை நூல்களைத் தருவோர் பலர்; இப்போது எதற்குக் கிராக்கி அதிகம் என்றே தேடிப் பதிப்பவர் பலர். ஆனால் அறிவுக் கருவூலங்களாக உள்ள நூல்களை அழகுறவே வெளியிடுவது என்று பணி மேற்கொண்டவர் மணிவாசகர் நூலகத்தினர்.

வாங்கும் சக்தியும், படிக்கும் ஆர்வமும் மிகவாகக் கவிழ்ந்து விட்ட தமிழ்நாட்டில், அறிவில் வறிய காற்றுவீசும் போதும் மணிவாசகர் நூலகமெனும் ஆலமரம் விழுது ஊன்றிப் பரந்துள்ளது.

புதுநூல், புதியமுறை, புதுவடிவம், இவைகளில் இப்பதிப்பகத்தார்க்கு மிகுந்த ஈடுபாடு. தனித்தமுயற்சியில் அடக்கமாக அறிவுப்பணி செய்துவரும் இப்பதிப்பகத்தார் பாராட்டுக்குரியவர்கள்.

சிந்தனை நூல்களின் தங்கச் சுரங்கம் இப்பதிப்பகமாம். பருவமங்கையின் தளிர்மேனி. பளிச்சிடும் பதிப்பழகே அவளின் ஒளிச் சிரிப்பு. இவளுக்குப் படிக்கும் கூட்டம் சுயவரம் செய்வது தமிழில் மேலும் பல நூல் குழந்தைகளுக்கு வழியல்லவா?

நண்பர் ச. மெ. அவர்கள் நூல் விலையாகாத வறிய காலத்திலும் கூடக் காலை ஊன்றியவர். எனவே அவரின் கவின்மிகு பதிப்புக்கள் எதற்கும் அஞ்சாமல் வெளிவரும். ஆனால் பருவமங்கையில் சாயல் நுகரப் படித்தவர் கூட்டம் புறப்பட வேண்டாமோ? இந்தப் பதிப்பக நங்கையின் வாழ்வு சிறக்க வாழ்த்துகிறேன்.

**பி. எல். சாமி,** ஐ. ஏ. எஸ்,
அரசு செகரட்டரி, பாண்டிச்சேரி.

மணிவாசகர் நூலகம் பதினைந்து ஆண்டுகள் பணிபுரிந்தது கண்டு உவகையுறுகின்றேன். தமிழ் மொழியில் நூல்கள் வெளியிடும் பதிப்பகங்களில் தொடர்ந்து 15 ஆண்டுகள் நடந்து வருவன மிகச் சிலவே. நல்ல தரமான நூல்களை வெளியிட்டு வரும் மணிவாசகர் நூலகம் மேலும் பல்லாண்டு தமிழிலக்கியத்திற்குத் தொண்டாற்ற வேண்டுமென்று வேண்டுகிறேன். வாழ்த்துகின்றேன்.

## கவிஞர் நாரா. நாச்சியப்பன்,

சென்னை.

உழைப்புக்கு ஓர் உருவம் உண்டென்றால் அது பேராசிரியர் ச. மெய்யப்பன் அவர்களையே சாரும். திருவாசகம் அருளிய மணிவாசகப் பெருமானின் திருப்பெயரால் தொடங்கிய நூலகம், பதினாறு ஆண்டுகளில் பெற்றிருக்கும் வளர்ச்சிக்குத் திரு. மெய்யப்பரின் ஓயாத உழைப்பே காரணமாகும். ஒவ்வொரு துறையிலும் நிறைந்த அறிவு சான்ற சிறந்த ஆசிரியர்களின் நூல்களையே தேர்ந்தெடுத்து வெளியிட்டு வருவது மணிவாசகர் நூலகத்தின் சிறப்பாகும். நிறைவு பெற்ற கருத்துச் செறிவுடைய – நாட்டுக்குப் பயன்நல்குகின்ற – அறிவுக்கதிர் பரப்புகின்ற நூல்கள் மணிவாசகர் நூலகத்தின் வெளியீடுகள் !

இளமைப் பொலிவு துலங்குகின்ற பருவம் பதினாறாண்டுப் பருவம். இப் பருவத்தில் மணிவாசகர் நூலகம் வளனும் நலனும் பெருகிப் பொலிந்து விளங்குகின்றது. இப்பொலிவு வரும் ஒவ்வோராண்டும்-எதிர்காலம் முழுவதும் ஆற்றொழுக்குப் போன்று தொடர்ந்து துலங்க வேண்டும் என்று நெஞ்சார வாழ்த்துவோம்.

அறிவுலகம் வாழ்த்திசைக்க
　　ஆண்டுபதி னாறுய்ச்
செறிவுமிகு நூற்பதிப்புச்
　　செய்யும்மணி வாசகரே
செய்யுமணி வாசகரே
　　சீர்மிகவே வாழியரோ
வையமெலாம் போற்ற
　　வளர்ந்தோங்கி வாழியரோ !

கவிஞர் ஈரோடு தமிழன்பன்,
சென்னை.

அறிவுத் தீவுக்கு இட்டுச் செல்லும்
புத்தகத் தோணிகள் புறப்படும் இடம்
மணிவாசகர் நூலகம்.

காகித வீதிகளில் கண்ணால் நடப்போருக்கு,
கையுறையாக நல்ல கருத்துக்களைத்
தரும் புத்தகத் தயாரிப்பில் நண்பர்
மெய்யப்பன், தன் தேர்ச்சியின்
அடையாளத்தைப் பகல்போல் தெளிவாகப்
பதித்துவிட்டார்.

பழந்தமிழ்ப் பாதுகாவலராய் இருக்கும்போதே
புதுத் தமிழ் நலம் பேணும் புரவலராகவும்
இவர் இருப்பது என் பாராட்டுக்கு இவரை
இலக்காக்கியிருக்கிறது.
எழுத்துக்களை ஏடுகளில் அச்சடிப்பது
எளிது. இவர்போல் எண்ண விளக்குகளை
ஏற்றி வைப்பது — வெளிச்சவிவரம் புரிந்தவர்க்கும்
கூட ஒவ்வொரு வேளையில் அரிதுதான்.

மக்களின் விடுதலைக்கும்
நல்வாழ்வுக்கும்
நம்பிக்கை நல்கும் படைப்புக்களை —
பிற்போக்குத் தனங்களை
முறியடிக்கத் துணை செய்யும்
தளவாடங்களை — இன்னும் இவர்
தயாரித்துத் தர வேண்டும்
என்பது என்
விருப்பம்; வேண்டுகோள்.

**M. R. அப்துல்ரஹீம்,**
யுனிவர்சியல் பப்ளிஷர்ஸ்,
சென்னை.

மணிவாசகர் நூலகம் சென்ற பதினறு ஆண்டுகளில் பல அரிய தமிழ் நூல்களை வெளிக்கொணர்ந்து தமிழுக்கும் தமிழ் கூறும் நல்லுலகு வாழும் மக்களுக்கும் பெரும் தொண்டு ஆற்றியது கண்டு மகிழ்கிறேன். அது என்றும் பதினருய் விளங்கி நூற்ருண்டு நூற்ருண்டு காலம் இவ்வுலகில் வாழ்ந்து பெரும் பணியாற்ற விழைகின்றேன் ; இறைஞ்சுகின்றேன்.

**டாக்டர் சி. சத்தியமூர்த்தி,**
ஆய்வாளர், தமிழ்த்துறை,
கேரளப்பல்கலைக் கழகம்.

வாலறிவன் இன்பக் கூத்தாடுகின்ற தில்லைநகரிலே, அப் பெருமானின் மெய்யடியாரும் அறிவாற் சிவனே எனப் போற்றப்பட்டவருமாகிய மணிவாசகர் பெரும் பெயரால் புகழோடு தோன்றி இனிது நடைபெறும் இந்நூலகம், தமிழர் களின் அறிவு வளர்ச்சிக்கு ஆற்றி வருகின்ற பணி ஆழமானது. தமிழும் தத்துவமும், உரையாசிரியர்கள் முதலான தரமிக்க நூல்களை இந்நூலகம் தந்துதவியுள்ளது ; தமிழ் இலக்கிய வரலாற்றில் இந்நூலகப் பெயர் நிலைத்து நிற்கும் ; நூலகத்தை இயக்கி வரும் ச. மெய்யப்பன் அவர்களை எத்தனை புகழ்ந்தா லும் தகும். வாழ்க நூலகம். வளர்க ஞானவளம்.

**புலவர் சோம. இளவரசு.**
தமிழ் விரிவுரையாளர், அண்ணமலைப் பல்கலைக்கழகம்.

பயிருக்கு மழைபோல் எழுத்துக்குப் பதிப்பகம்; மழலை எழுத்தாளர்க்குத் தாயாகித் தாலாட்டுவதும் முதிய எழுத்தாளரின் அறிவுத்தேனை இளைய தலைமுறைக்கு இனிய விருந்து ஆக்குவதும் பதிப்பகம்; மறுமலர்ச்சியுலகில் படைப்பானுக்கும் படிப்பானுக்கும் பாலமாக அமைந்து பணியாற்றுவதும் பதிப்பகம். பதிப்பகம் இன்றேல் இலக்கிய உதிப்பகம் எய்த்துவிடும். தமிழகத்தின் எழுத்துவிதி, சிலரால் உறுதிப் படுத்தப்படுவதுபோல் இலக்கிய வெளியீட்டு விதியும் பதிப்பகங்கள் சிலவற்றாலேயே உறுதிப்படுத்தப் படுகின்றன. அத்தகைய பதிப்பகங்கள், குறிப்பிடத்தக்கனவே. அவற்றுள் ஒன்று மணிவாசகர் நூலகம்.

சிதம்பரத்திற்குப் பெருமை, தில்லைத் திருக்கோயிலால்; இது பழமை. சிதம்பரத்திற்குச் சிறப்பு, அண்ணமலைப் பல்கலைக் கழகம் தோன்றியமையால்; இது அணிமை. சிதம்பரத்திற்குப் புகழ், மணிவாசகர் நூலகம் அமைந்தமையால்; இது புதுமை.

மணிவாசகர் நூலகத்தில் நல்ல நூல்கள் வெளிவருகின்றன என்றால் அப்பெருமை அனைத்தும் இந்நிறுவனத்தின் உறுதுணையாளர் திரு. ச. மெய்யப்பன் அவர்களையே சாரும்.

## முனைவர் சாலை. இளந்திரையன்,

தில்லி.

நண்பர் திரு. ச. மெய்யப்பன் அவர்களின் மணிவாசகர் வெளியீடுகளைத் தொடர்ந்து பார்த்தும், படித்தும், கவனித்தும் வருகிறேன். பெரிதும் புறக்கணிக்கப்பட்டிருந்த சிற்றிலக்கிய ஆய்வுகளை அவர் வெளியிட்டதை உவந்து பாராட்டியும் இருக்கிறேன்.

இப்பதிப்பகம் தனது பதினாறாவது ஆண்டில் வெளியிட்டுள்ள புத்தகங்களின் பட்டியலைப் பார்த்த போது, இதன் பணிகள் நிறைந்த வகைமைப்பாட்டுடன் விரிவடைந்து வருவது புலப்பட்டது. தமிழ் கற்பித்தல் முதல் ஒப்பியல் நோக்கு வரை, நாவல் முதல் தமிழும் தத்துவமும் வரை, ரசனை முதல் கல்வெட்டுக்கள் வரை — பல துறைகளையும் அளாவிய வெளியீடுகள் எனக்கு மிகுந்த மகிழ்வைத் தருகின்றன.

வாணிபம் என்பது, செய்வதும் விற்பதும் அல்லது வாங்குவதும் விற்பதும் மட்டும் அல்ல; நாம் வணிகம் மேற்கொண்ட பொருளில் அல்லது துறையில் இப்போது எது தேவை என்பதை அறிந்து, அதை வழங்க முயல்வதே வாணிபம். மொழி, இலக்கியம், பண்பாடு ஆகியவற்றோடு தொடர்புடைய வியாபாரத்தில் இந்த உண்மை முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டும். திரு. மெய்யப்பன் தமிழோடு தொடர்புடையவராகையால் இந்த ஓர்மையோடு, புத்தகங்களை வெளியிடுகிறார். பாராட்டுகிறேன்.

## மகாவித்துவான் **மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை**

சென்னை.

### மங்கல வாழ்த்து

மணிவா சகரின் மாண்புசால் பெயரால்
மணிமணி யான நூல்பல வழங்கித்
தமிழர் நெஞ்சில் தனியிடம் பெற்ற
கமழ்மணத் தோடு கண்ணிய முற்றுப்
பதிஞ ருண்டு பண்புற நடைபெறும்
துதிபெறு நூலகம் தொண்டிற் பின்னும்
ஊக்கம் காட்டி ஆக்கப் பணிசெய
ஊக்கி யருள உயர்திரு மாலின்
தேக்குந் திருவருள் தெருட்டுக வேண்டியான்
பல்லாண்டு கூறிப் பாராட்டு கின்றேன்!
வாழிநூல் திருப்பணி வையகஞ் சிறக்க
வாழி வாழி வழிவழிச் சிறந்தே!

## கோ. இராமச்சந்திரன்,

பச்சையப்பன் கல்லூரி, சென்னை.

வருவாயையே பெரிதெனக் கொள்ளாமல் மணிவாசகர் நூலகத்தினர் வெளியீடுகள் மூலம் செய்துவரும் தமிழ் வளர்ச்சிப் பணியினைப்போற்றி ஆக்கத்திற்குத் துணைபுரியத் தமிழகம் கடமைப்பட்டிருக்கிறது. மணிவாசகர் நூலகம் மாண்புடன் வளர்க! வாழ்க!

## அகிலன்

சென்னை.

சிதம்பரத்தில் இருந்துகொண்டு மணிவாசகர் நூலகம் ஆழ்ந்த அமைதியான இலக்கியப் பணியைப் பதினாறு ஆண்டுகளாகச் செய்து வருவதறிந்து மகிழ்ச்சியுறுகிறேன். கி. வா. ஜ., டாக்டர் வ. சுப, சதாசிவ பண்டாரத்தார் போன்ற பல பேரறிஞர்களின் சிந்தனைகளை அது தமிழ் மக்களுக்கு வழங்கி வருகிறது. அண்மைக்காலத்தில் அதன் கவனம் சிற்பி போன்ற ஆற்றல்மிக்க இளம் கவிஞர்களின் நூல்களை வெளியிடுவதில் திரும்பியிருப்பது வரவேற்கத் தக்கது. இந்த நல்ல நூலகத்தைக் கட்டிக் காத்து வளர்த்து வரும் அன்பர் திரு. ச. மெய்யப்பன் அவர்களுக்கு என் வாழ்த்துக்கள்; பாராட்டுக்கள்.

## மு. அருணாசலம் எம். ஏ.

இயக்குநர், வடமொழி, தமிழ் ஆய்வு நிலையம்,

சென்னை.

மணிவாசகர் நூலகம் சென்ற பதினாறு ஆண்டுகளாக நல்ல ஆராய்ச்சி நூல்களை வெளியிட்டுள்ளது. சென்னை நகரத்திலேயே ஆராய்ச்சி நூல் வெளியீடு குறைவு. இந் நூலகத்தார் சிதம்பரத்திலிருந்து கொண்டு இத்தகைய பணி செய்து வருவது பாராட்டற்குரியது. இதை வளர்த்து வருகின்ற அன்பர் ச. மெய்யப்பனைப் பெரிதும் பாராட்டுகிறேன்.

பணிகள் சிறக்க.

**டாக்டர் மெ. சுந்தரம்,** எம். ஏ , எம். லிட்., பிஎச். டி.,
தலைமைத் தமிழ்ப் பேராசிரியர், தமிழ்த்துறைத் தலைவர்.
மாநிலக் கல்லூரி, சென்னை.

சிதம்பரம் மணிவாசகர் நூலகத்தின் பதினோராண்டுப் பணி குறித்து விழா அயர்வது அறிந்து பெரிதும் மகிழ்ந்தேன். நூற்கள், மக்களின் புலமை ஆற்றலைக் காட்டுவன; சிந்தனைக் கருவூலத்தின் வளமனை. அந்த வளமனையினை உருவாக்கிய அன்பர் திரு. ச. மெய்யப்பனார் அவர்கள், பொருளைப் பொருட்டாக எண்ணாமல், தரத்தை உரமாக நினைந்து, அறிவுப் பணியாம் ஆக்கப் பணியால் ஈடுபட்டு வெற்றி கண்டிருப்பது பெரிதும் போற்றிப் பாராட்டத்தக்கதாகும்.

தண்டமிழ் இலக்கிய வளர்ச்சிக்குத் தம் வெளியீடுகள் வாயிலாக மணிவாசகர் நூலகம் ஆற்றிவரும் பணி பெரிதும் போற்றுதற்குரியது. பலவேறு துறைகளில் சிற்றிலக்கியமும் பேரிலக்கியமும் வெளியிட்டுள்ளனர். திறனாய்விற்கும் ஆய்விற்கும் உறுதுணை பயக்கும் நூல்கள் பல வெளியிட்டிருப்பது பெரு மகிழ்விற்குரியது.

பதினோராண்டுப் பணி பல்லாண்டுப் பணியாய், தண்டமிழ்ப் பணியாய், தாய்த்திருப்பணியாய் என்றும் நின்று இலங்க வாழ்த்துகின்றேன்.

**டாக்டர் ஔவை துரை. நடராசன்,**
இயக்குநர், மொழிபெயர்ப்புத்துறை, சென்னை.

ஆராய்ச்சி நூல்களையும், அருங்கலைப் பனுவல்களையும், அழகுற வெளியிடும் நம் மணிவாசகர் நூலகம் தம் பதினறு ஆண்டு விழாவினை நடத்துவது பாராட்டுவதற்குரியதாகும். இனிய நண்பர் புத்தகச் சிற்பி, ச. மெய்யப்பன், மணிவாசகர் நூலகத்திற்கு உறுதுணையாளராக விளங்குவது பதிப்புத் துறைக்கு ஒளியேறி வருகிறது. தக்கவர்களை அணுகுவதும் தகுதிவாய்ந்த நூல்களைத் தெரிந்து எடுப்பதும் மிகு சிறப்போடு வெளியிடுவதும் ஆகியவற்றால் மணிவாசக நூல்கள் மாட்சி பெறுகின்றன. மணிவாசகர் நூலகம் கிளைகள் பரப்பிச் சீரிய செந்தமிழ் நிறுவனமாக நூறாண்டு சிறந்து விளங்க வாழ்த்துகிறேன். இனிய நண்பரின் நற்பணி நாளும் சிறக்க வாழ்த்துகிறேன். தொண்டு தொடரட்டும்.

**இரா. இராஜசேகரன்,** பி. எஸ்ஸி., பி. எல்.,
பூம்புகார்.

அண்மை வெளியீடுகளான மார்க்கபந்து சர்மாவின் சிலம்பின் ரசனை, சிலப்பதிகாரத் திறனாய்வு இரண்டு நூல்களையும் திருச்சியில் தற்செயலாகப் பார்த்து வாங்கினேன். சர்மாவின் நூல்கள் சேகரிக்கப் பெரிதும் பாடுபட்டேன். மிகவும் மகிழ்ச்சி தந்தது. அரிய நூல். பழம் நூல்களைக் கொண்டு வரும் முயற்சி பாராட்டத் தக்கது. அதற்கிணையாக இன்று ஆய்வு நூல்கள் வரவில்லை. அட்டையும் அச்சும் மிக அழகு. தொடர்ந்து வெளியிட்டு வெற்றியும் பெறக் கண்ணகிப் பெருமாட்டியை வணங்கி வழிபடுகிறேன்.

**இரா. இராமலிங்கம்,**
துணைத்தமிழ்ப் பேராசிரியர்,
அரசினர் ஆடவர் கல்லூரி, குடந்தை.

செயல்திறன், செய்நேர்த்தி எனும் இரண்டாலேயே ஒரு மனிதனின் அல்லது நிறுவனமொன்றின் வினைஆற்றல் மதிப்பிடப்படவேண்டும். இவ்விரண்டிலும் சிறந்து விளங்குவதால் சிதம்பரம் மணிவாசகர் நூலகம் சாகித்திய அகாதெமி பரிசும், தமிழக அரசுப் பரிசும், இந்திய அரசுப் பரிசும் எனப் பல பரிசுகளைத் தன் வெளியீடுகளுக்குப் பெறமுடிந்தது. சென்னை போன்ற நகரங்களில் தோன்றிய வெளியீட்டகங்களே நன்கு வளர்ச்சி பெறமுடியும் என்பதற்கு மாறாக, பாடநூல்கள் அன்றி, பொது நூல்கள் வாங்குவோர் குறைவாக உள்ள சிற்றூர்களிலும், ஊக்கத்தோடு கூடிய உழைப்பிற்குப் பயன் விளையும் என்ற புதியதோர் விதியைப் படைத்த இவ்வெளியீட்டகம் நனிவாழ்க!

விளைபொருள் சிறப்பெல்லாம் விளைநிலத்தைச் சார்ந்தது எனுமாப்போலே, இந்நூலகத்தின் வெற்றியனைத்தும் இதனை நெறிப்படுத்தும் திரு. ச. மெய்யப்பன் அவர்களைச் சாரும். திறன் செயும் ஆற்றலும், விரைந்து செயல்படும் வேகமும் துணிவும் நிரம்பிய இவர் ஈட்டுவன வெற்றியும், புகழும், தமிழ்க்காப்புமே ஆகும்!

**வெ. பழநியப்பன்,** எம். ஏ., எம். லிட்.,
அண்ணுமலைப் பல்கலைக் கழகம்.

சிதம்பரம் மணிவாசகர் நூலகம் பதினாறு ஆண்டுப் பணியில் நிறைவு பெற்றுத் தமிழ்நாட்டுத் தலைசிறந்த பதிப்பகங்களுள் ஒன்றாகத் திகழ்வது கண்டு உளமகிழ்வெய்துகின்றேன். நூலகத்தின் உறுதுணையாளர் திரு. ச. மெய்யப்பன் உடன்பயின்றவர்; 25 ஆண்டுகள் ஒரே நிலையில் உளம் திறந்து பழகும் கேண்மையினர்; சுறுசுறுப்பும் சலியா உழைப்பும் அவரது உடன்பிறப்புக்கள். பல்கலைக் கழகத்தில் பயின்ற காலையிலேயே 'முத்தமிழ்' என்ற கையெழுத்து இதழைத் தொடங்கித் தமது பதிப்பகப் பணிக்கு அடித்தளம் அமைத்துக் கொண்டார். புதுக்கோட்டை மாவட்டம் இராமச்சந்திர புரத்தைச் சேர்ந்த நண்பர், அங்குத் தோன்றிய 'அன்பு நிலையம்' முதலிய பதிப்பகச் சூழலில் வளர்ந்து, பல்கலைக் கழகத் தமிழ்க் கல்வியால் உரம் பெற்றுத் தில்லைக்கோபுரம் போன்ற தமது பதிப்பகத்தின் உயர்வில் அவர் பெருமிதம் கொண்டு திகழ்வது மகிழ்ச்சிக்குரியது. வணிகம் கருதித் தீயனவற்றை அச்சில் பதிப்பிக்க விரும்பாத பண்பாளர் என்பது நமக்குப் பெருமை தருகின்றது. சிற்றூர்களில் ஒதுங்கியுள்ள முதுபெரும் அறிஞர்களாகிய திருவாளர் ஏ. வி. சுப்பிரமணிய ஐயர், மார்க்கபந்து சர்மா முதலியோரைத் தேடிச்சென்று நல்ல நூல்கள் பலவற்றை வெளியிட்ட பெருமையாளர். எழுத்தாளர்களுக்குப் பல்வேறு துறைகளில் துணை நின்று பயனுள்ள நூல்களை அவர் பதிப்பித்துள்ள பணி தமிழகத்துச் சான்றோர் அறியாத ஒன்றல்ல.

பெரியாரைத் துணைக் கொள்ளுதல், அறிஞர்களோடு கலந்து பழகுதல், தெளிவான திட்டங்கள், சலியாத உழைப்பு

என்ற நற்பண்புகளே அவரது வெற்றியின் ரகசியம். ஆக்க பூர்வமான திட்டங்கள் பலவற்றைக் கொண்டுள்ள இனிய நண்பரின் இடையருத முயற்சி தொடர்ந்து வெற்றிபெற அன்புநிறை உள்ளத்தால் வாழ்த்துகின்றேன்.

‘ கலைமாமணி ’
**புத்தனேரி ரா. சுப்பிரமணியம்,**
சென்னை.

## பதினாறு வயதினிலே ..........!

பதினாறு வயதினிலே பன்னூல் செல்வம்
　　படைத்த **மணி** வாசகர்நூ லகமே தில்லைப்
பதிமீது வேரூன்றித் தமிழ் வளர்க்கும்
　　பணிபோற்றும் ஆண்டுவிழாக் கணக்கை எண்ணிப்
பதினாறு புதுநூல்கள் பதிப்பிக் கின்றார்
　　பண்பாளர் **மெய்யப்பர்** புலமைச் செம்மல் ;
மதிசூடும் கூத்தனருள் மழையால் வெற்றி
　　மலரட்டும்! கலைப்பணிகள் வாழ்க வாழ்க !

**பேராசிரியர் தெ. ஞானசுந்தரம்,** எம். ஏ.
தமிழ்த்துறை,
கந்தசாமி நாயுடு கல்லூரி, சென்னை - 40

சிதம்பரத்தில் அமைந்துள்ள தங்கள் நூலகத்திற்கு ஒரு தனிச்சிறப்பு உண்டு. தமிழ்ப் பேராசிரியர் ஒருவரால் நிறுவப் பெற்று நடத்தப்பெறும் நல்ல நூலகம் உங்களுடையது. ஆகவே, தரமான தமிழ் நூல்களை வெளியிடுவது என்னும் உறுதி எடுத்துக் கொள்ள வேண்டிய தேவை இல்லாமல் போய்விட்டது. தாங்கள் வெளியிடும் நூல்கள் அனைத்துமே தகுதிமிகுதியும் படைத்த தரமான நூல்களாகத் திகழ்கின்றன.

ஆரவாரமில்லாமல் அமைதியாக இயங்கும் தங்கள் நூலக வெளியீடுகளில் திரு. கி. வா. ஜ. அவர்களின் 'வீரர் உலகமும்' திரு. மு. வை. அரவிந்தன் அவர்களின் ' உரையாசிரியர்களும் ' பரிசு பெற்றுள்ளது தங்கள் பெருமையினைப் பறையடிக்கின்றது.

சில புதிய எழுத்தாளர்களையும் தங்கள் நூலகத்தின் வாயிலாக நாட்டிற்கு அறிமுகப்படுத்தியுள்ளீர்கள்.

உங்கள் நூலகச் செல்வி எல்லா நலன்களும் பெற்றுக் கணக்கின்றிப் புத்தகக் குழந்தைகளை ஈன்று நாட்டிற்கு ஆக்கம் சேர்க்க இறைவன் திருவடிகளை வணங்குகின்றேன்.

**அ. ஆனந்த நடராச தீட்சிதர்,** எம். ஏ.,
அண்ணமலைப் பல்கலைக்கழகம்.

அறிவை வளர்க்கும் நூல்கள் பலவற்றை இயற்றியும், இயற்றச் செய்தும், பதிப்பித்தும், பதிப்பிக்க உதவியும், பிற மொழி நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்தும் தமிழுக்கு அருந்தொண்டாற்றி வரும் நிறுவனம் மணிவாசகர் நூலகம். மணிவாசகர் வெளியீட்டின் தனித்தன்மை கருதி உடன் வாங்கி வைத்துக் கொள்ளவேண்டும் என்ற வேட்கை அறிஞர்களுக்கெல்லாம் தோன்றியிருக்கிறது எனின் இதன் பெருமையை என்னென்பது.

இந்நூலகக் காப்பாளர் ச. மெய்யப்பன் அறிவாற்றலும் உழைப்பும், பலருடன் இனிது பயிலும் பாங்கும், பெரியோரைப் பணியும் சால்பும், உடையவர். ஆங்கில நூலுக்கு நிகராகத் தமிழ் நூல்களைப் பதிப்பித்துத் தமிழ் மொழிக்கு ஏற்றம் தர முனைந்து செயல்படுபவர். பிற பதிப்பகங்களின் நூல்களையும் எள்ளாது நல்லவற்றை உளமாரப் பாராட்டி நாடறியப் பறைசாற்றுபவர். அவற்றின்வளர்ச்சிக்கும் தயங்காது நல்வழிகளைக் கூறுபவர். எச்செயலையும் எண்ணித் திட்டமிட்டு, முன்னேற்பாட்டோடு செய்யுந் திறனே இவருடைய வெற்றிக்குக் காரணம். கல்வி பற்றியும், தமிழ் வளர்ச்சி பற்றியும் நாளும் சிந்தித்துக் கொண்டே யிருப்பதால் தமிழ்க் கருவூலங்களைத் தருபவர். இணைந்து செயல்பட்டால் நினைப்பது அத்தனையும் படைத்திடலாம் என்பதற்கு எடுத்துக்காட்டு இவர். ஒருவர் இவரை அணுகி ஒரு கருத்தைக் கூறி, இதை எப்படி நூலாக ஆக்கலாம் என்று கேட்டால் அவருக்கு ஆக்கம் பயக்கும் கருத்துக்கள் எல்லாம் கூறிச் சிதறிக் கிடக்கும் பற்பல நூல்களையும் சென்று

முயன்று தேடித்தந்து அரியநூலை உருவாக்க உதவுவதில் இவருக்கு நிகர் இவரே.

வாழ்க அவர்தம் தமிழ்த்தொண்டு.

வளர்க மணிவாசகர் நூலகம்.

தில்லைக் கூத்தனிடம் ஆராக் காதல் கொண்ட இவர், அவனருளால் எல்லா நலங்களும் பெற்று நீடு இனிது புகழுடன் வாழ இறைஞ்சுகின்றேன்.

'கலைமாமணி' 'முத்தமிழ்க் காவலர்'

**கி. ஆ. பெ. விசுவநாதம்**

தமிழ் நூல்களிலும், தரமான நூல்களை வெளியிட்டு மக்களின் உள்ளங்களை மகிழ்வித்து வருகின்ற மணிவாசகர் நூலக நிறுவனத்தின் 16-ம் ஆண்டுவிழா அண்மையில் நடைபெறவிருக்கிறது என்ற செய்தியும், அதன் நினைவாக மலர் ஒன்று வெளிவரவிருக்கிறது என்ற செய்தியும் என்னை மகிழ்விக்கின்றன.

டாக்டர் **க. ரத்னம்,** எம். ஏ.,
தமிழ்ப் பேராசிரியர்,
அண்ணா அரசினர் கலைக்கல்லூரி, முசிறி.

மணிவாசகர் நூலகம் பதினாறு ஆண்டுகளாகத் தமிழ் இலக்கியம் கற்கும் மாணவர்களும், ஆராய்ச்சியாளர்களும் பயன்படுத்திக்கொள்ளும் வகையில் பல அரிய ஆய்வு நூல்களை வெளியிட்டுள்ளது. என் ஆய்வில், ஆய்வுக்குப் பயன்பட்ட தமிழ்நூல்களின் பட்டியலில் இடம் பெற்றிருக்கும் மணிவாசகர் நூலக வெளியீடுகளே என் கருத்தினை அரண் செய்வதாகும்.

**K. C. Kamaliah,**
Ashoknagar, Madras.

## Manivasagar Nulakam is Twice Eight

Knowledge is equated to God. Anyone lending a helping hand in the dissemination of knowledge is varily engaged in the service of God. Not without reason, the Almighty is described as Nularipulavan – The Erudite Scholar saturated with knowledge. As such, a publishing concern is a store house of knowledge whence all these thristing to know draw their requirements. It is not a one-way trafic. The treasure chest, on its part, unburdens itself at the very doors of the votaries of knowledge. Manivasakar Nulakam, Chidambaram, joins the ranks of such temples of learning. It has completed the proverbial sixteen years and is at the prime of youth and may it for ever retain the same in the service of society dispelling darkness and remain a luminous body! It possess the added advantage of putting an innings in the cause of Tamil. With a slight modification of William Wordsworth's lines, we may say :

*" May twice eight consenting years shed*
*Their utmost bounty on the head! "*

**Kamil Zvelebil**

M. V. Aravindan, the author of an excellent book in Tamil called " Uraiyaciriyarkal " commentators (Madras 1968), gives an illustration which shows how very much is, in its structure Nakkirar's prose akaval like.

பன்மொழிப் புலவர், பல்கலைச் செல்வர்,

## டாக்டர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார்,

மேல்நாட்டில் வளரும் பதிப்பகங்களையும் அவை பதிப்பிக்கும் நூல்களையும் பார்க்கும்போது, தமிழ்நாட்டில் பதிப்பகங்கள் இருக்கின்றனவா என்று கூட ஐயம் தோன்றும். எனவே, நமக்கு நிறையப் பதிப்பகங்கள் வேண்டும். அதோடு, பதிப்பகங்கள் பலவகை நூல்களையும் பதிப்பிக்க வேண்டும்.

மணிவாசகர் நூலகம் இந்த வகையில் சிறந்த தொண்டே செய்து வருகிறது. நூல்களின் தலைப்புகளைப் பார்த்தாலேயே இந்த உண்மை விளங்கும். தமிழ் வளர்ச்சிக்கு இன்றியமையாத நூல்கள் இவை என்பதும் விளங்கும். எனவே, மணிவாசகர் நூலகத்தைப் பாராட்டாமல் இருக்க முடியாது. வாழ்க! மணிவாசகர் நூலகம்.

## டாக்டர் சோ ந. கந்தசாமி

ச. மெய்யப்பன் 1933-ஆம் ஆண்டு புதுக்கோட்டை மாவட்டம் இராமச்சந்திரபுரத்தில் பிறந்தவர். தவச்செல்வராம் பழ. சண்முகம் அவர்களின் மகன். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் பயின்றவர். அப்பல்கலைக் கழகத்திலேயே விரிவுரையாளராகப் பணியாற்றி வருபவர். டாக்டர் பட்டத்திற்காகப் 'பதிப்புக்கலை' என்னும் பொருள் பற்றி ஆய்பவர்;

இவரை அறியாத எழுத்தாளர் இருக்க முடியாது; இவர் அறியாத நூலும் வெளிவந்திருக்காது. இவரால் உருவாக்கப் பெற்ற புதிய எழுத்தாளர் பலர். கேள்விச் செல்வம்

இவருக்கென அமைந்த தமிழ்ச் செல்வம். உண்மை, உழைப்பு, பக்தி இவையே இவரின் வெற்றிக்கு வழிகள். தமிழ் இலக்கியச் சோலையில் பல்லாயிரம் பூக்கள் மலர்ந்து எங்கும் மணம் பரப்ப வேண்டுமென்பது இவர் அவா. திறனய்வில் இவர் தராசுக்கோல்.

## புலவர் சோம. இளவரசு

தமிழகம் முழுமையும் சுற்றிய கால்கள்; வெளிவந்த அனைத்து நூல்களையும் பார்த்த கண்கள்; எதையும் ஒளிக்காமல் திறந்து பேசும் இதயம்; வளரும் தமிழுக்கு வாழ்வளிக்கத் துடிக்கும் உள்ளம்; நூற்றுக்கும் மேற்பட்ட நூல்களைப் பதிப்பித்த அறிவுச் செம்மை; எழுத்தாளனுக்குத் தடங்காட்டும் ஒளி விளக்கு; பொய்ம்மைக்குப் போர்க்குரல்; மெய்ம்மைக்கு வாழ்த்தொலி; ஆம்... இவ்வளவும் சேர்ந்த தமிழுருவத்தின் பெயர் ச. மெய்யப்பன். இல்லற ஞானியாய் - குங்குலியக் கலயனரைப் போல வாழ்கின்ற மதிப்புயர் பழ. சண்முகனரின் தலைமகன் இவர். அண்ணமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ் எம். ஏ. பயின்றவர்; அப்பல்கலைக்கழகத்திலேயே 1957 முதல் தமிழ்த் துறையில் பணியாற்றுபவர்; இளைஞர்களின் உள்ளங்களில் அறிவு வித்துக்களைத் தெளிப்பவர்.

எழுத்தாளருக்கு எழுதுகோலாய் விளங்கும் இவர், நூல் பல படைக்கின்ற கருத்துச் சுரங்கம். இச்சுரங்கத்தில் கிடைத்த முதல் மணியே 'மும்மணிகள்'. தாகூர், கபிலர், என்பன இவர் தரும் பிற தமிழ்ப் பரிசுகள்.

## மணிவாசகர் நூலகத்தின் சிறந்த வெளியீடுகள்

| | | ரூ | பை |
|---|---|---|---|
| கம்பர் | டாக்டர் வ. சுப. மாணிக்கம் | 5 | 00 |
| (தமிழக அரசின் பரிசு பெற்றது) | | | |
| ஒப்பியல் நோக்கு | ,, | 6 | 00 |
| சிந்தனைக்களங்கள் | ,, | 16 | 00 |
| இலக்கிய விளக்கம் | ,, | 3 | 00 |
| வீரர் உலகம் | கி. வா. ஜகந்நாதன், எம். ஏ. | 3 | 50 |
| கவி பாடலாம் | ,, | 6 | 50 |
| கம்பர் விருந்து | ஜி. சுப்பிரமணிய பிள்ளை | 5 | 00 |
| தமிழ் உள்ளம் | ,, | 5 | 00 |
| வேள்வித்தீ | எம். வி. வெங்கட்ராம் | 6 | 00 |
| நித்யகன்னி | ,, | 6 | 00 |
| அரும்பு | ,, | 18 | 00 |
| ஒரு பெண் போராடுகிறாள் | ,, | 20 | 00 |
| பரிபாடல் திறன் | டாக்டர் இரா. சாரங்கபாணி | 9 | 00 |
| நால்வர் நான்மணிமாலை | வை. இரத்தினசபாபதி | 4 | 00 |
| கபிலர் | ச. மெய்யப்பன், எம். ஏ. | 4 | 00 |
| தாகூர் | ,, | 6 | 75 |
| நந்திக் கலம்பகம் | புலவர் முத்துப் பிள்ளை | 4 | 00 |
| உணவியல் | ,, | 2 | 50 |
| உணவு நெறி | ,, | 3 | 00 |
| பாலின் சிறப்பு | ,, | 1 | 50 |
| நிலவுப்பூ | சிற்பி. பாலசுப்பிரமணியன் | 4 | 00 |
| சிரித்த முத்துக்கள் | ,, | 4 | 00 |
| காந்திய நெறி | க. சந்தானம் | 2 | 00 |
| உலகப் பெருங் கவிஞர்கள் | ப. கோதண்டராமன் | 3 | 50 |
| இலக்கியமும் திறனாய்வும் | ,, | 4 | 00 |
| இலக்கியமும் வாழ்க்கையும் | வ. பெருமாள் | 4 | 00 |

| நூல் | ஆசிரியர் | ரூ. | பை. |
|---|---|---|---|
| இலக்கியமும் கல்வெட்டுக்களும் | சதாசிவ பண்டாரத்தார் | 5 | 00 |
| கல்வெட்டுக்கள் கூறும் உண்மைகள் | ,, | 4 | 00 |
| பிளினி | வி. எஸ். வி. இராகவன் | 20 | 00 |
| பெரிப்ளூஸ் | ,, | 16 | 00 |
| மெகஸ்தனீஸ் | ,, | 16 | 00 |
| யுவாங்சுவாங் | ,, | 9 | 00 |
| சிலம்பின் ரசனை | ஆர். எஸ். மார்க்கபந்து சர்மா | 8 | 00 |
| இமயம் முதல் குமரி வரை | சோமலெ | 7 | 00 |
| தமிழும் தத்துவமும் | டாக்டர் சோ. ந. கந்தசாமி | 12 | 50 |
| உரையாசிரியர்கள் | மு. வை. அரவிந்தன் | 30 | 00 |
| மொழியியல் சிந்தனைகள் | ,, | 6 | 50 |
| சிலப்பதிகாரத் திறனாய்வு | மது. ச. விமலானந்தம் | 5 | 00 |
| தேசிய இலக்கியம் | அ. ச. ஞானசம்பந்தம் | 7 | 00 |
| தமிழ் கற்பித்தல் | டாக்டர் எம் எஸ். திருமலை | 15 | 00 |
| இலக்கிய வரலாறு | புலவர். சோம. இளவரசு | 4 | 00 |
| இலக்கண வரலாறு | ,, | 4 | 75 |
| இருபது நூற்றாண்டுகளில் தமிழ் | ,, | 5 | 00 |
| பரணி இலக்கியம் | ,, | 6 | 50 |
| திருவருணைக் கலம்பகம் | ,, | 3 | 50 |
| சதக இலக்கியங்கள் | டாக்டர் ந. வீ. செயராமன் | 6 | 50 |
| தூது இலக்கியங்கள் | ,, | 6 | 50 |
| உலா இலக்கியங்கள் | ,, | 6 | 50 |
| யாப்பியல் திறனாய்வு | ,, | 6 | 50 |
| பாட்டியல் திறனாய்வு | ,, | 3 | 50 |
| The poetry and philosophy of Tamil siddhars | **A. V. Subramania Ayyar** | 4 | 00 |
| Indo Aryan loan words in old Tamil | **Dr. S. Vaithyanathan** M. A. | 12 | 00 |

## பதினாறுவதாண்டின் சிறந்த வெளியீடுகள் பதினாறு

| | | |
|---|---|---|
| டாக்டர் வ. சுப. மாணிக்கம் | | |
| ஒப்பியல் நோக்கு | 5 | 00 |
| கி. வா. ஜகந்நாதன் | | |
| கவி பாடலாம் | 6 | 50 |
| சதாசிவ பண்டாரத்தார் | | |
| இலக்கியமும் கல்வெட்டுக்களும் | 5 | 00 |
| கல்வெட்டுக்கள் கூறும் உண்மைகள் | 4 | 50 |
| வி, எஸ். வி. இராகவன் | | |
| பிளினி | 20 | 00 |
| பெரிப்ளுஸ் | 20 | 00 |
| ஆர், எஸ். மார்க்கபந்து சர்மா, எம். ஏ., | | |
| சிலம்பின் ரசனை | 8 | 00 |
| சோமலெ | | |
| இமயம் முதல் குமரி வரை | 5 | 00 |
| டாக்டர் சோ. ந. கந்தசாமி | | |
| தமிழும் தத்துவமும் | 12 | 50 |
| டாக்டர் ந. வீ. செயராமன் | | |
| யாப்பியல் திறனாய்வு | 6 | 50 |
| பாட்டியல் திறனாய்வு | 3 | 50 |
| மு. வை. அரவிந்தன் | | |
| மொழியியல் சிந்தனைகள் | 6 | 50 |
| மது. ச. விமலானந்தம் | | |
| சிலப்பதிகாரத் திறனாய்வு | 5 | 00 |
| எம். வி. வெங்கட்ராமன் | | |
| ஒரு பெண் போராடுகிறாள் | 20 | 00 |
| அரும்பு | 18 | 00 |
| ச. மெய்யப்பன் | | |
| தாகூர் | 6 | 75 |

Wrapper Printed at Mani Productions Madras-600 017 Phone 441520